

டிசம்பர், 1990

# ஸப்தகிரி

விலை ரூ. 1/-

மலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கஞ் செய்த தாமோதரனை
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித் தொழுது
வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க
போயபிழையும் புகுதருவானின்றனவும்
தீயினில் தூசாகும் செப்போலா ரெம்பாவாய்

*மாயச் செயல்களையுடையவனும், பகவத் ஸம்பந்தம் நித்யமாகப் பெற்றுள்ள வடமதுரைக் குத் தலைவனும் பரிசுத்தமாய் ஆழம்மிக்கிருக்கிற தீர்த்தத்தையுடைய யமுனை ஆற்றங் கரையை நிருபகமாகயுடையவனும் இடைக்குலத்தில் விளங்கா நின்றுள்ள மங்கள தீபம் போன்றவனும் தாயாகிய தேவகிப் பிராட்டியின் வயிற்றை விளங்கச் செய்தவனுமான கண்ணபிரானை அடிக்கியோமாகிய நாம் பரிசுத்தியுள்ளர்களாய்க் கிட்டி, நல்ல மலர்க ளைத் தூவி வணங்கி வாயாரப் பாடி நெஞ்சார தியானம் பண்ண, அதன்பிறகு, சேஷ, சேஷி பாவஞான முண்டாவதற்கு முன்பு கழிந்த பாவங்களும், பின்பு தன்னை அறியாமல் வரக் கூடிய பாவங்களும் நெருப்பிலிட்ட பஞ்சு போலே உருமாய்ந்து போம் (ஆனபின்பு) அவ் வெம்பெருமான் திருநாமங்களைச் சொல் (எம்பாவாய்)*

(திருப்பாவை — 5)

# ஸப்தகிரி


**டிசம்பர் - 1990**

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 7


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில : ஆண்டாள
சித்திரம்: கே. ராமசநதிரயயா

2-ம பக்கம . ஸ்ரீ கல்யாண வேஙகடேஸவரசுவாமி கோயில் - நாராயணவனம்

3-ம் பககம . ஸ்ரீ சாரங்கபாணி கோயில் - குடந்தை

பினனடடையில : பாவை நோன்பு
சித்திரம: சசி


சிறப்பாசிரியர் :
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவா,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

ஒரு சராசரி மனிதன் உண்மையாகவே பிற உயிர்களுக்கு உதவிடும்போது திர சிந்திப்பதில்லை. உதவி செய்ய வேண்டும் என்ற உணர்வு இயல்புணர்ச்சியாகவே ஒவ்வொரு மனிதனிடமும் உள்ளது. அவ்வுணர்வின்மீது தன்னலம் எனும் மாசு படரும்போதுதான் அவன் தன் அழிவை எதிர்நோக்குகின்றான் - அவ்வுணர்வினை அவன் வளர்த்துக் கொள்ளத் தவறும்போதுதான், அவனுள் எழும்வெறுப்பும், வேற்றுமையும் பிரச்சனைகளை உண்டாக்குகின்றன. 'நான்' 'எனது' 'எமது' எனும் சுயநல உணர்வுகளே மனிதனுள் குறைகள் வளர வழிவகுக்கின்றன. 'அன்பு' எனும் அடிப் படை சமுதாய உணர்வு மனிதர்களிடையே மாண்டு போவதால்தான் சுயநலம் அவனுள் வேரூன்றுகிறது. தாய்மீதான அன்பு பாசத்தின் பெருமையைக் கூறிடும். மொழிமீதான அன்பு பல இலக்கியங்களை மலரச் செய்யும். நாட்டின் மீதான அன்பு தியாகத்தின் மாண்பினையும், உழைப்பின் அருமையினையும் விளக்கிடும். சமயத்தின்மீதான அன்பு நல்ல சமுதாயத்தை உருவாக்கிடும். ஆனால் அவ்அன்பே வெறியாக மாறினால் பகையே அதனால் விளையும்; அழிவே இறுதிப்பயனாக அமையும். இவ்அன்பின் வலிமையைத்தான் இந்து சமயம் நமக்குக் காட்டிட்ட பெரியதோர் உண்மை யாகும். இதனைத்தான் பரம்பொருளான அம்மாயவன் தன் அவதாரங்களின்மூலம் எடுத்துக் காட்டியுள்ளான்.

'உலகத்தில் எப்போதெல்லாம் தர்மம் அழிய அதர்மம் தலைவிரித்தாடுகின்றதோ, அப்போதெல்லாம் நான் இம்மண்ணில் தர்மத்தைக் காப்பாற்ற அவதாரம் புரிகின்றேன்' என்று கீதையில் கோவிந்தன் ஒலித்ததற்கொப்ப, மண், பொன், பெண், புகழ் ஆகியவற்றின்மீது வெறிகொண்டு, அதர்ம நாயகர்கள் உருவாகி, அன்பின் ஊற்றான உத்தமனின் புகழ்பாட மறந்திட்டபோது அவர்களை அழித்திட அவதாரம் ஒன்றே இன்றியமையாததாக விளங்கியது. ஆரம்பத்தில் யுகத்திற்கு ஒருவனாக அதர்மத்தின் தலைவர்கள் விளங்கிட, பின்னர் வந்திட்ட யுகங்களில் அவர்கள் பன்மையில் உயர்ந்திட்டபோது, ஒருவனை அழித்து அதனாற்றான் மற்றவரைத் திருத்தி மக்களிடையே தர்மத்தை வளர்த்திட வழி கோலும் பணி மிகவும் கடினமாக அமைந்துவிட்டது போலும். தீயோன் ஒருவனாக விளங்கிட்டபோது, அவனைத் தண்டித்தல் எனும் செய்கை எளிதாக அமைந்திடலாம். அவர்களே பலராக பெருகியபோது தண்டனை என்பதைவிட அவர்களுடைய மனதைத் திருத்துவதே பெரும் உபாயமாக - எளிதான செயலாக விளங்கியது. அதனால்தான் கலியுக மாந்தர்களைத் திருத்திட தண்டோபாயத்தைவிட போதனாயுபாயமே கைக்கொள்ள வேண்டியிருந்ததால், சமுதாயம் மேன்மயடைந்திடும் வகையில் 'அன்பின்' அமைதியின் அஹிம்சையின் முக்யத்துவத்தைப் பறைசாற்ற வந்த புத்தனின் பிறப்பும் ஒரு அவதாரமாக இம்மாநிலம் போற்றியது போலும்.

ஆற்றல் மிக்கது மனிதப்பிறவி. சிந்திப்பதால், அவ்இனம் ஓர் ஆக்கப் பூர்வமான சக்தியாக இயங்குகிறது. தீக் குணங்கள் அவனுள் புகுவது இடையேயாதலால், அவற்றை நீக்கிடும் வகையில், அவனை அழிப்பதைவிட தகுந்த அறவுரைகள் வழங்கி அவற்றைக் களைந்துவிட்டால் அவன் மீண்டும் மனிதனாவான் - இம்மண்ணிற்குப் பயனாவான். இக்கருத்தைத்தான், வாழ்க்கையில் கொடுந்தொழில் புரிந்தோர் பலர் இறைத் தொண்டர்களாகவும் மக்கள் தலைவர் களாகவும் விளங்கிய செய்திகள் பல நமக்கு உணர்த்துகின்றன. ஆகவேதான் புத்தனைத் தொடர்ந்து, சங்கரர், மத்வர், இராமானுஜர் சமயாசார்யர்கள், இராமகிருஷ்ணர், விவேகானந்தர் போன்ற மேன்மக்கள் தங்கள் நல்லோபதேச நெறி யால் அன்றும் இன்றும் பாரதத்தின் புகழ் பேசும் சமயம் மற்றும் சமுதாய சீர்திருத்தவாதிகளாக விளங்கினர். உலகச் சமயங்கள் யாவும் அன்பையே அடிப்படையாகக் கொண்டு போதனைகள் புரிந்துள்ளன.

சமயத் தலைவர்களும், சமயத் தொண்டர்களும், சமயாச்சாயர்களும் அன்பு வழியில், அதனாற்றான் பெறப் படும் அமைதியின் பின்னணியில் தங்களுடைய சமயக் கருத்துக்களை இம்மண்ணில் தூவி வந்துள்ளனர். இத்திருப் பணியில் அவர்களைத் தொடர்ந்து ரமண மகரிஷி, சிவானந்தர், சிருடி சாய்பாபா, மெஹர்பாபா போன்ற மகான்கள் இம்மண்ணில் நம் கண் முன்பேயே நடமாடிட்டப் பெருமையினையும், சிறப்பினையும் நாம் பெற்றிட்டோம், இன்றும் அவர் தம் வழியில், சமய பாகுபாடற்று, இன, இட, மொழி வேறுபாடின்றி 'அன்பு நெறியே' எல்லோரையும், எப்போதும் இணைத்திடும் அரும்பெரும் இயக்கம் என்பதை இவ்வுலகோர் அறிந்து தெளிந்திடும் வகையில், 'அன்பே தெய்வம்' 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்பனவற்றைத் தன் இயக்கத்தின் தாரக மந்திரங்களாகக் கொண்டு, தன் பிறந்த நாளின்போது ஏராளமான வெளிநாட்டார் உள்ளிட்ட இலட்சக்கணக்கான சமூக சேவர்களையும், பக்தர்களையும் ஆந்திர மாநிலம் புட்டபர்த்தியில் ஒருங்கே இணைத்திட்ட ''சாயிபாபா'' அவர்கள் மனிதருள் அவர் மேம்பட்டவர் - தனிச்சிறப்பு உடையவர் எனும் தகுதி பெற்றுள்ளார் என்பதை யாராலும் மறுக்கவோ, மறக்கவோ முடியாது. அவரை ஒரு மந்திர வாதி என்று ஒரு சிலர் அழைத்திட்டாலும், மகான் என்று பலர் தொழுதிட்டாலும், விந்தை மனிதர் என்று ஒரு சிலர் கூறிட்டாலும் பலர் சிந்தையில் அவர் வீற்றிட்டாலும், அவராலும், அவர் பெயராலும் பெரிய அளவில் அமைக்கப்பட்டு செயற்பட்டுவரும் மருத்துவ மனைகளும், இலவச சத்திரங்களும, கல்வி நிலையங்களும், சமூக நிறுவனங் களும் அவர்தம் அன்பு நெறிக் கொள்கையினை ஏற்றிப் புகழும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர்தம் சமூகத் தொண்டு தொடர்ந்து செயற்படவும், அதனாற்றான் பலரும் அவரைத் தொடர்ந்து அவர்பணிகளை மேற்கொள்ளவும் சாயிபாபாவின் மேலும்பல பிறந்த நாட்களை இம்மாநிலம் கொண்டாடிட வேங்கடவனின் திருவருள் அவருக்குக் கிடைப்பதாகுக!

# செய்திச் சுருக்கம்

ஆந்திர மாநில அரசு பொறியியல் துறையைச் சார்ந்த திரு. கே. எல். நாராயணமூர்த்தி அவர்கள் 8-10-90 முதற்கொண்டு தி. தி. தேவஸ்தானத்தின் தலைமைப் பொறியாளராக பதவி ஏற்றுள்ளார்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநிலத்தின் தலைமைச் செயலர் திரு. பி. வி. வி. பி. ராமாராவ் அவர்கள் 10-10-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

திருமலையில் விரைவாக கோயில் பிரஸாதங்கள் செய்வதற்குப் பயன்படும் வகையில் ரூ. 9.93 இலட்சம் செலவில் நவின அரவை நிலையம் ஒன்றினை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத் அவர்கள் 14-0-90 அன்று திறந்து வைத்தார். இதனால் ஒரு மணி நேரத்தில் 750 கிலோ கிராம் எடையுள்ள தானிய வகைகள் துகளாக்கப்படும்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில வணிகவரி அமைச்சர் திரு. டி. ஸ்ரீநிவாஸ் அவர்கள் 23-10-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

திருமலையில் வருடந்தோறும் நடைபெறும் ஆர்ஜித சேவையான புஷ்பயாகம் இவ்வாண்டு 27-10-90 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்வாண்டு 115 கிருஹஸ்தர்கள் தலா ரூ. 3500/- (இச்சேவைக்கான கட்டணமான) செலுத்திப் பங்கேற்றார்கள்.

ஃ ஃ ஃ

தில்லியைச் சேர்ந்த நிறுவன அதிபர் ஒருவர் திருமலையானுக்குத் தங்க ஆபரணங்கள் செய்வதற்காக ரூ. 10 இலட்சம் நன்கொடையாக 27-10-90 அன்று அளித்துள்ளார். மேலும் திருமலையில் யாத்திரிகர்கள் தங்குவதற்கான ஒய்வுக்கூடம் ஒன்றினைக் கட்டுவதற்காக ரூ. 74,000மும் அளித்துள்ளார். பம்பாயைச் சார்ந்த தொழிலதிபர் ஒருவர் திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் மருத்துவ மனைக்கான மருத்துவ கருவிகள் வாங்குதற்கென ரூ. 1 இலட்சம் நன்கொடையாக அளித்துள்ளார். பம்பாயைச் சார்ந்த மற்றொரு பக்தர் திருமலைக் கோயிலுக்கென தங்கத்தேர் ஒன்றினை செய்திடும் போது, அதற்கு உதவிடும் வகையில், தன் பங்காக ரூ. 51,000 நன்கொடையாக அளித்துள்ளார். மேலும் அட்பக்தர் திருமலையில் விருந்தினர் விடுதி கட்டிடம் ஒன்றினைக் கட்ட ரூ. 15 இலட்சம் வழங்கவும் விருப்பம் தெரிவித்தார்.

ஃ ஃ ஃ

திருமலைக்கோயில் உண்டியல் காணிக்கைகளைப் பிரித்து,பணத்தை எண்ணும் பணியான 'பரகாமணி' எனும் நிகழ்ச்சி இதுவரை கருப்பகிருஹத்திற்கு முன் உள்ள 'பங்காரு வாகிலி' எனும் பகுதியில் நடைபெற்று வந்தது. அப்பணி 5-11-90 முதற்கொண்டு கருப்பகிருஹத்திற்குப் பின் உள்ள வேதபாராயண மண்டபத்தில் நடைபெற்று வருகின்றது. இடமாற்றம் செய்யப்படுவதற்கு முன்பு, கோயிலின் உத்ஸவ மூர்த்திகள் மற்றும் உண்டி ஆகியன கோயில் பிராகாரத்திற்குள் திருவீதிவலம் கொண்டு வரப்பட்டன. அன்று மதியம் உண்டியல் காணிக்கைகளை பிரித்தெண்ணியபோது அன்றைய வருமானம் ரூ. 9 இலட்சமாகும். மேலும் பக்தர் ஒருவர் செலுத்திய ரூ. 4,10,000 கொண்ட பணமுடிப்பு ஒன்றும் அவ்வுண்டியலில் இருந்தது குறிப்பிடத்தக்கச் செய்தியாகும்.

ஃ ஃ ஃ

திருமலையில் கருடாத்ரிநகர் குடில்களின் கட்டிடத்தின் மேல் ரூ 2.66 கோடி செலவில் முதல்தள கட்டிடங்கள் கட்டப்படும்.

ஃ ஃ ஃ

தி.தி. தேவஸ்தானம் கடந்த சில ஆண்டுகளாகத் திருமலைக்கு வரும் யாத்திரிகளுக்கு இலவசஅன்னதானம் வழங்கிடும் வகையில் ஸ்ரீவேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம் ஒன்றினைச் செயற்படுத்தி வருகின்றது. அத்திட்டம் இனிமேற்கொண்டு "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்ன பிரஸாத திட்டமாக" செயற்படும். இவ்வகையில் நாள் ஒன்றிற்குச்சுமார் 15,000 யாத்திரிகர்களுக்கு இலவச அன்னதானம் வழங்கப்படுகிறது.

ஃ ஃ ஃ

திருப்பதியை அடுத்துள்ள திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில் முகத்துவாரக் கதவுகளை விரைவில் செம்பினால் செய்து அவற்றிற்குத் தங்க முலாம் பூசப்படும்.

ஃ ஃ ஃ

மொரிஷியஸ் நாட்டில் கட்டப்பட்டு வரும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலுக்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரர், ஸ்ரீ பத்மாவதி மற்றும் ஸ்ரீ ஆண்டாள் ஆகியோரின் கற்சிலைகளை இலவசமாக தி. தி. தேவஸ்தானம் வழங்கும்.

ஃ ஃ ஃ

திருச்சானூர் ஸ்ரீபத்மாவதிதாயார் திருக்கோயிலில் பிரதி வியாழன் தோறும், திருமலைக்கோயில் நடைபெறுவதுபோன்றே, திருப்பாவாடை எனும் ஆர்ஜித சேவை நடைபெறும். காலை 11 மணி முதல் 12 மணிகுள் நடைபெறும் இச்சேவைக்கான கட்டணம் ரூ. 3000 ஆகும். முழு விவரங்களுக்கு உதவி செயலாட்சித் தலைவர் ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில் திருச்சானூர் (வழி) திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

ஸ்ரீ ராமகிருஷ்ணா மடம் வெளியிட்டுள்ள சில தேர்ந்த ஆங்கில நூல்களைத் தெலுங்கில் மொழிபெயர்த்திடும் வகையில் அம் மடத்தார்க்கு தி. தி. தேவஸ்தான மேலாண்மை ரூ. 10 இலட்சம் வழங்கும். மேலும் எதிர்காலத்தில் இவ்வகைக்கான பணிக்கு உதவிடும் வகையில் ரூ. 25 இலட்சம் வைப்புநிதி ஏற்படுத்தப் படும்.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் மருத்துவ மனைக்கென புதிய நவீன கருவிகளை வாங்குவதற்கு ரூ. 73.6 இலட்சம் வழங்கப்படும். மேலும் சிகிச்சை பெறும் நோயாளி ஒருவர்க்கு நாள் ஒன்றுக்குக் கொடுக்கப்படும் உதவித் தொகை ரூ. 12லிருந்து ரூ. 15 ஆக உயர்த்தப்படும். (48-ம் பக்கம் பார்க்க)

ஃ ஃ ஃ ஃ



அன்றாடம் நெய், பால், தயிர், தேன் போன்றவைகளால் அபிஷேகமும் நறுமலர்களால் அர்ச்சனையும், அறு சுவை உணவு வகைகளால் நைவேத்ய மும் செய்விக்கப்பட்டன. தூப தீப நைவேத்யங்கள் முடிந்து, கற்பூர ஹாரத்தி காட்டி மந்த்ர புஷ்பம் சொல்லி முடித்து தீர்த்த ப்ரஸாதம் வழங்கப்படும். மாலை வேளைகளில் ஆன்மீகச் சொற்பொழிவுகளும், உள் ளத்தைச் சுண்டியிழுக்கும் ஸ்வாமி அய்யப்ப பஜனைகளும் அங்குக் கூடி


திரு. S. சந்திரமௌளிஸ்வாமி
திருப்பதி.


யுள்ளோரைப் பக்திப்பரவசத்தில் ஆழ்த்தின. சிலர் உணர்ச்சிப் பெருக் கில் எழுந்து ஆவேச நடனம்கூட செய்தனர்.

இவற்றையெல்லாம் தலைமைத் தாங்கி நடத்திவந்தார் பரமேச்வரன் குருஸ்வாமி. அவர் ஒரு மஹா பக்த சிரோன்மணி என்றால் மிகையா காது. அவர் எத்தனை தடவை சபரிமலை யாத்திரை செய்துள்ளார் என்பது அவருக்கே தெரியாது. அவ ருக்கு நாட்டின் பல பாகங்களிலும் சீடர்கள் உள்ளனர். பெயருக்கு ஏற்ப ஸாக்ஷாத் பரமேச்வரனைப்

# நம்பிக்கைதான் கடவுளா?

கடந்த ஒரு மாத காலமாகவே அந்த சிற்றூர் திருவிழாக் கோலம் பூண்டு காணப்பட்டது. கார்களிலும் பேருந்துகளிலும், கால்நடையாகவும் ஜனத்திரள் வந்து குவிந்த வண்ணம் இருந்தது. ஊரின் நடுமைய மாக விளங்கும் அந்தத் திடலில் பெரிய பந்தலமைத்து மேடை கட்டி வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப் பட்டுள்ளன. பந்தலி இருமருங் கிலும் ஹோமகுண்டங்கள் கட்டப் பட்டு இடைவிடா மந்திர ஒலியுடன் ஹோமம் நடத்தப்படுகின்றன. மேடையில் நடுநாயகமாக சுமார் 20 அடி உயரத்திற்கு ஸ்வாமி அய்யப்ப னின் வண்ணச்சித்திரம் பட்டபந்த வடிவில் அமர்ந்து அனைவரையும் வாருங்கள் வணங்குங்கள் என்பதைப் போல அழகுற அமைக்கப்பட்டிருந் தது. அதன் கீழ்பாகத்தில் பஞ்ச உலோகங்களால் செய்யப்பட்ட ஸ்வாமி அய்யப்பனின் சிலைக்கு போன்ற பொலிவுடன் தோற்றமளிக் கும் இவர் இதுபோன்ற யாகங்கள் பல ஊர்களில் பலதடவைகள் நடத்தி, மக்கள் மத்தியில் ஆன்மீகத்தை வளர்த்திவரும் மஹான் என்று அனை வராலும் போற்றப்படுபவர். இந்தத் தடவை எப்படியாகிலும் ஐயப்ப ஸாக்ஷாத்காரம் பெற்றே தீருவது என்ற எண்ணத்தில் தொடர்ந்து ஒரு மண்டல காலம் (41 நாட்கள்) கோடி அர்ச்சனையும், மஹா ஹோமமும்,



முருகப்பெருமான் திரு கோயில் - எட்டிக்குடி
*எம். ராஜகோபாலன் - சென்னை.

பஜனை பூஜைகளும் நடத்த எண்ணி இவ்வூர் வந்துள்ள இவருக்கு அவ்வூர் மக்கள் மட்டுமின்றி வெளியூர் பக்தர்களும் தங்களது ஆதரவையும், ஒத்துழைப்பையும் பரிபூரணமாக நல்கினர். வெளியூரிலிருந்து ஹோம காரியத்தில் பங்கேற்க வந்த வேதியர்கள் மற்றும் ஸாது ஸன்யாஸிகள் தங்குவதற்கும், அவர்கள் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் தனித் தனியாக ஆட்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். அப்படி நியமிக்கப்பட்டிருந்தவர்களுள் ஒருவன் தான் வண்ணார சுப்பன். அவனுக்கு இடப்பட்ட பணி அன்றாடம் அதிகாலையில் மண்டபத்திற்குச் சென்று ஹோமகாரியத்திற்காக வந்துள்ளவர்கள் குளித்துமுடித்து களைந்த உடைகளை எடுத்துச்சென்று ஊர்க் கோடியிலுள்ள ஏரியில் துவைத்து உலர்த்தி மடித்து அவரவர்களிடம் சேர்ப்பிப்பதுதான். முதலில் 'கை நிறைய காசு கிடைக்கும்! வேண்டுமளவு கள்ளு குடிக்கலாம்' என்று உற்சாகத்துடன் ஒப்புக் கொண்டான். ஆனால் அவனை அழைத்து வந்து ஏற்பாடு செய்தவர், பெரியவர் முன்னிலையிலேயே "சுப்பா! இவர்கள் நம் ஊருக்கு வந்ததே நாம் செய்த மஹாபாக்யம். எங்களுக்கு இவர்களது தரிசனத்தால் புண்ணியம் என்றால் உனக்கு அவர்கள் தரித்த உடைகளைத்துவைத்துத் தரும் நற்பேறு கிடைத்துத்துள்ளது. ஆகையால் எங்களைவிட மிகுந்த பாக்கியசாலி நீயென நான் எண்ணுகின்றேன். ஆகையால் இவர்கள் தொண்டு முடியும்வரை நீ மது அருந்தக்கூடாது. நல்லபடியாக வேலை செய்து பெரிய சாமியிடம் நற்பெயர் எடுக்கவேண்டும்" என்றார். முதல் முறையாக பரமேச்வரன் குருஸ்வாமியைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒரு பக்தி கலந்த மரியாதை அவர்பால் ஏற்பட்டது சுப்பனுக்கு. அந்த நிலையிலேயே அவர்களுடைய கட்டளைக்குக் கீழ்ப்பணிவதாக வாக்களித்துவிட்டான். முதல் இரண்டு மூன்று நாட்களுக்குச் சற்று கஷ்டமாகத்தான் தோன்றியது. ஆனால் தினமும் ஒருமுறை பரமேச்வரன் குருஸ்வாமியைத் தரிசிக்கும் போது அவனுள் இருந்த சபலப் பேய் இருந்த இடம் தெரியாமல் மாயமாய் மறைந்து விட்டது. இந்த முப்பது நாட்களும் சுப்பனுக்கு காலை முதல் மாலைவரை வேலை சரியாக இருந்தது. கவனத்தை வேறெங்கும் செலுத்தாமல் அருட்பணி செய்வோரின் தொண்டிலேயே நேரம் முழுவதும் செலவிட்டதால் கள் குடிக்க வேண்டும், போதையில் மிதக்க வேண்டும் என்ற எண்ணமே மறந்து போய் இது சீனுஸ்வாமி துணிகள், இவை ராமன்ஸ்வாமி துணிகள், இவை பெரியஸ்வாமி துணிகள் என ஒவ்வொன்றாக எடுத்து நனைத்து துவைத்து, காயவைத்து மடித்து அவரவர் துணிகளை அவரவர்களிடம் சேர்ப்பிப்பதிலேயே கண்ணும் கருத்துமாகக் கடமையாற்றி வந்தான் சுப்பன்.

'கடமையைச் செய், பலனை நான் தருகிறேன்' என இயம்பியுள்ள கடவுள் செவ்வனே கடமையாற்றி வரும் சுப்பனுக்கு தகுந்த பலனைத் தர எண்ணினார் போலும்.

மறுநாள் அதிகாலை வழக்கம் போல சுப்பன் அழுக்குத் துணிமூட்டைகளைச் சேகரித்துக் கொண்டு ஏரிக்குப் புறப்படும் சமயம் பெரிய சாமி தனியாக பந்தலைச் சுற்றி ஏற்பாடுகளை கவனித்து வருவதைக் கண்டு துணி மூட்டைகளைக் கீழே போட்டு ஓடோடிச் சென்று அவரை சாஷ்டாங்கமாக வணங்கி எழுந்தான். தன்தாள் பணிந்த அவனை அன்புடன் வாழ்த்தி எழச்செய்து "என்ன சுப்பா! அடியார்கள் துணிமணிகளையெல்லாம் நன்கு துவைத்துத் தருகின்றாயா?" என வினவினார். "சக்திவஞ்சனையின்றி செய்து வருகின்றேன் ஐயா" என்று வினயமாகக் கூறினான். அந்த நேரம் அந்தப் பந்தலில் நடுநாயகமாக வீற்றிருந்த ஐயப்பன் சுப்பனைப் பரிசோதிக்கத் திருவுளம் கொண்டது மாதிரி சுப்பனின் அடுத்த கேள்வி எழுந்தது. "ஸ்வாமி! நீங்கள் இந்த ஊருக்கு வந்து, பலநாட்களாகத் தொடர்ந்து பூஜை போட்டு வருகின்றீர்களே எதற்காக ஸ்வாமி" என்றான். "சுப்பா! ஐயப்பனை நேரில் காண வேண்டிதான் இந்த பூஜை பஜனைகள். அதனால் உலகத்தோர் அனை

வருக்கும் மேன்மை கிட்டும். அதற்காக மக்கள் ஒன்றுகூடி அவரைப் பூஜித்து ஸாக்ஷாத்காரம் பெற முயலுகின்றனர்'' என்றார். ''யார் வேணுமானாலும் அய்யப்பனைக் காணமுடியுமா ஸ்வாமி'' என்றான சுப்பன். ''பக்தியுடனும் திடமான நம்பிக்கையுடனும் உளமாரப் பூஜித்தால் ஒவ்வொருவரும் ஸ்வாமி அய்யப்பனைத் தரிசிக்கலாம்'' என்றார் பெரியஸ்வாமி. ''நான் கூட முயன்றால் அவரைக் காணவியலுமா ஸ்வாமி'' என ஆவலுடன் வினவினான் சுப்பன். அந்தக் கேள்வி பரமேச்வரன் குருசாமியின் கோபத்தைத் தூண்டுவதாக அமைந்து விட்டது. மஹாசாந்தசீலரும் ஆணவமற்றவருமான அவருடைய மனதில் நாம் இத்தனைக் காலம் பல பெரிய பூஜை ஹோமாதிகள் செய்து, கஷ்டப்பட்டு சாதிக்க நினைத்துள்ள பெரும் காரியத்தை அழுக்குத்துணி துவைத்து வயிறு வளர்க்கும் சுப்பனால் சாதிக்கவியலுமா? இவன் கடமையை மறந்து பாதை மாறுகின்றான். இவனுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அதே சமயம் அய்யப்பன் பெரிய குருஸ்வாமியின் நாவில் அமர்ந்து பேசவைத்தானோ என எண்ணும்படி அவரது வாயிலிருந்து வெளிவந்த வார்த்தைகள் சுப்பனின் மனதில் வைராக்கியத்தை வளர்க்கும் வண்ணம் பதிந்தது. ''சுப்பா உனக்கும் அய்யப்ப ஸாக்ஷாத்காரம் வேண்டுமா? அது ஒன்றும் அவ்வளவு கடினமான காரியமல்ல'' என்றார் சற்றே ஏளனமான குரலில். அவரது குரலில் தொனித்த ஏளனத்தை உணரும் திறனற்ற சுப்பன் ''அப்படியானால் அந்த வழியை எனக்கும் கூறுங்கள் ஸ்வாமி'' என்றான் பாமரத்தனமாக. பரமேச்வரசர்மாவின் பேச்சில் ஆணவத்தின் சாயல் படிந்தவுடனே அய்யப்பன் அவரையும் சோதிக்கும் வண்ணம் அவருட்புகுந்து பேசவாரம்பித்தார். ''அப்படியானால் உனக்குக் கண்டிப்பாக அய்யப்



ஸ்ரீ அய்யப்பசுவாமி கோயில் - சென்னை.

பனைத் தரிசித்தே தீரவேண்டுமென்ற உறுதி வந்துவிட்டதுபோல் இருக்கின்றதே! நீ என்ன செய்து அய்யப்பனைக் காணப்போகின்றாய்? பூஜையா? பஜனையா? ஹோமமா?'' என்றார். அதற்கு சுப்பன் ''ஸ்வாமி எழுத்தறிவு இல்லாதவன் அதெல்லாம் என்னால் முடியுமா? வேறு ஏதாவது எளிய வழி இருந்தால் சொல்லுங்கள்'' என்றான் வினயமாக. ''ஆகா! எளிய வழிதானே சொல்கிறேன் கேள். நீ துணி துவைக்கும் ஏரியில் மூக்கை மூடியபடி 'அய்யப்பா உன்னைக் காண வேண்டும்' என்றபடி தண்ணீருக்கடியில் அசையாமல் உட்கார், கண்டிப்பாக உனக்கு அய்யப்பர் காட்சி தருவார்'' என்றார். சுப்பன் அவர் கூறியதை அப்படியே குரு உபதேசமாக ஏற்றுக்கொண்டு அவ்விடம் விட்டகன்றான். இவனெல்லாம் அய்யப்ப ஸாக்ஷாத்காரம் பெற்றால் நாடு உருப்பட்ட மாதிரிதான் என எண்ணியபடி பெரியவரும் தனது பூஜை காரியங்களைக் கவனிக்கச் சென்றார்.

ஏரிக்கரையை அடைந்த சுப்பன் துணிமூட்டையை கரையில் போட்டு விட்டு பெரிய குருஸ்வாமி கூற்றையே முழுமையாக நம்பி, தண்ணீரில் இறங்கி மூக்கை மூடிக் கொண்டு, 'அய்யப்பா! அய்யப்பா!' என்றபடி அமர்ந்து விட்டான். வினாடிகள் கடந்து நிமிடங்கள் நகர ஆரம்பித்தன. மூச்சுவிடாவிட்டால் இறந்து விடுவோம் என்ற எண்ணமே இல்லாமல், பரமேச்வர சர்மாவின் வாக்கையே வேதவாக்காக, ஸத்யவாக்காக எண்ணி தன்னைக் காணவேண்டி தண்ணீரில் அமர்ந்திருக்கும் சுப்பனை மேலும் பரிசோதிக்க விரும்பாத ஐயப்பன் சுப்பனது நம்பிக்கையை வீணாக்காமல் அவன் முன்தோன்றி அவனது தோளைப் பற்றித் தூக்கி நிறுத்தினார்.

கண் திறந்த சுப்பன் தன்முன்னே ஸர்வாலங்கார பூஷிதராய் ஸாக்ஷாத் ஸ்ரீ ஐயப்பன் நிற்பதைக்கண்டு மெய் சிலிர்த்துப் போனான்.

இரத்தின, வைடூர்ய, புஷ்பராக, கோமேதக வைரங்களும் ஜெகஜ்ஜோதியாக ஜொலிக்கும் திவ்ய மணிஹாரம் பூண்டு பூரண நிலவையொத்த மதிவதனத்து மந்தஹாஸத்துடனும் அருட்பார்வையுடனும் தன்னையாட்கொண்ட ஹரிஹர ஸுதனைக்கண்ட சுப்பன் தன்நிலை மறந்திருந்த தரு

ணம "சுப்பா! என்னைக் காண விரும்பிய காரணம் யாது?" என வினவினார் ஐயன். தன் நிலை அடைந்த சுப்பன் அவரைக் கூர்ந்து நோக்கி ஐயம்தெளியாமல் "ஸ்வாமி! தாங்கள்தான அய்யப்பனா? அதற்குள் என்முன் தோன்றிவிட்டீர்களா? நான் சில வினாடிகள்கூட தண்ணீரில் அமரவில்லை! குருநாதர் சொற்படி நடந்தால் சில நாட்களிலாவது அய்யப்பனைக் காணலாம் என நினைத்திருந்தேன். ஆனால் நான் தண்ணீரில் மூழ்கி தற்கொலை செய்து கொள்ள எண்ணியதாக தாங்கள் தவறாக நினைத்து என்னைக்காப்பாற்ற அய்யப்பன் வேடம் பூண்டு வந்துள்ளீரோ என சந்தேகப்படுகின்றேன்" என்றான்.

அதற்கு ஐயன் "சுப்பா! தண்ணீருக்குள் மூச்சுவிடாமல் எவனாலும் சிலவினாடிகளுக்கு மேல் உயிருடன் இருக்கவியலாது. குருவின் மூலம் என்னைக் காணும் வழி இதுதான் எனக்கேட்டு என்னைக்காண நம்பிக்கையுடன் தண்ணீரில் அமர்ந்த நீ இறந்து விட்டால் குருவின் வாக்கு பொய்த்துவிடும். குருவின் வாக்கு பொய்யானால் குருவின்றி ஈசனைக் காணவியலாது என்ற மறைமொழியும் பொய்த்து விடும். உன் நம்பிக்கை பொய்த்து நீ இறந்துவிட்டால் உன்னால் கடவுளைக் காணவியலாது போனால்... இனி எவரும் கடவுளைத் தேடும் முயற்சியில் ஈடுபடமாட்டார்கள். கடவுள் இல்லைஎன்றாகிவிட்டால்... உலகில் கடவுள் வழிபாடு அற்றுவிடும். மனிதர்களிடம் கடவுள் நம்பிக்கை அற்றுவிட்டால் நாத்திகம் மேலோங்கி அதர்மமும், அராசகமும் தலைவிரித்தாடும். அப்படி நடக்குமானால் நல்லோரும், நலிந்தோரும் நிலைகுலைந்து விடுவர். அப்படி நடக்காமல் தடுக்கத்தான், உலகில் தர்மத்தைக் காக்கத்தான், உன் நம்பிக்கையை மெய்ப்பிக்கத்தான் 'நம்பிக்கைதான் கடவுள்' என்பதை உலகோர்க்கு உணர்த்தத்தான் குருவின் வாக்கை மெய்ப்பித்து உனக்குக் காட்சி தந்தேன். உனக்கு வேண்டும் வரங்களைக் கேள் தருகிறேன்" என்றார்.

"வரமா! அதெல்லாம் எனக்கெதற்கு ஸ்வாமி. ஏதோ உங்களைப் பார்க்க வேண்டுமென்று தோன்றவே பெரியசாமியைக் கேட்டேனே தவிர எனக்கு வேறு ஒன்றும் வேணடாம் ஸ்வாமி. உங்கள் தரிசனம் கிடைத்ததே மஹாபாக்கியம்ஸ்வாமி. எனக்கு நிறைய வேலை இருக்கிறது. அதே போல உங்களுக்கும் பலவேலைகள் இருக்கும். எனக்கு விடை கொடுங்கள் ஸ்வாமி" என்ற சுப்பனிடம் "சுப்பா! இதுவரை என்னை தரிசித்த எவரையும் நான் வெறுங்கையுடன் அனுப்பியது கிடையாது. நீயும் ஏதாவது வரம் கேளப்பா" என்றார் ஸ்வாமி அய்யப்பன். அவர் பலமுறை ஏதாவது கேளப்பா என்ற போதிலும் சுப்பனுக்கு அவரிடம் வரம் கேட்க எந்தத்தேவையும்இருப்பதாகத் தோன்றவில்லை. ஆகையால் அவர் ஏரிக்கரையிலிருந்த துணி மூட்டையைப் பிரித்து துவைத்து உலர்த்தி, மடித்து புறப்படமுனைந்த போது, "சுப்பா! உனக்கு இப்பொழுது வரம் ஏதும் வேண்டாம். என்றாலும், பிறகு எப்பொழுது தேவையென்றாலும் என்னிடம் தயங்காமல் கேட்டுப்பெறலாம்" என்று கூறி அங்கிருந்து மறைந்தார் அய்யப்பன்.

துரித கதியில் தன் பணியை முடித்துக்கொண்டு வீடு சேர்ந்த சுப்பன் நடந்ததனைத்தையும் தன் மனைவியிடம் விவரமாகக் கூறினான். அவனது வார்த்தைகளை நம்ப மறுத்த அவன மனைவி அவன் கள் குடித்து விட்டு வந்து உளறுகின்றான் என்ற எண்ணத்தில் "மாமா! நீ வேலைக்குச் சேரும் தினமே பெரியசாமி முன்பாக தண்ணிபோடமாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்துட்டு, இப்ப இப்படிச் செய்யலாமா?" என்றதற்கு "சிங்கி! சத்தியமாக நான் தண்ணி போடலை. நான் ஸ்வாமி அய்யப்பனை இந்த ரெண்டு கண்ணால பார்த்தேன். என்னை நம்பமாட்டாயா?" என்றான் தீனமாக. அவன் மனைவி சற்று புத்திகூர்மையுள்ளவள். சுப்பனின் கூற்றில் ஏதோ கொஞ்சம் உண்மையிருக்கும் போல் தோன்றவே அவனிடம் பொய்க்கோபம் காட்டி, "மாமா! நீ இவ்வளவு சுயநலக்காரன் என்று நான் நினைத்துக்கூட பார்த்ததில்லை. நீ மட்டும் அய்யப்பனை தரிசித்தேன் என்கின்றாய் 'ஸ்வாமி வீட்டில் என் மனைவியொருத்தி இருக்கின்றாள். அவளுக்கும் காட்சி கொடுங்கள்' என்று கேட்கத் தோன்றியதா?" என்று சுப்பனை மடக்கினாள். சுப்பனுக்கு அவளது கேள்வியில் நியாமிருப்பதாகத் தோன்றவே 'சிங்கி! ஸ்வாமியை நேருக்கு நேர் பார்த்ததும் மனசெல்லாம் நிறைஞ்சு போச்சு. அவர் பல தடவை 'சுப்பா! உனக்கு என்ன வேணுமோ கேள்' என்ற போதும் ஒண்ணுமே கேட்கத் தோணலை. 'உனக்கு என்ன வேணும் என்றாலும் எப்போது வேணும் என்றாலும் என்னிடம் தயங்காமல் கேட்கலாம்' அப்படீன்னு சொன்னாரு. இரு இப்பவே போய் அவரைக் கூட்டிக்கிட்டு வாரேன்" என்றபடி, சிங்கியின் பதிலுக்குக்கூட காத்திருக்காத சுப்பன் விரைந்து ஏரிக்கரையை அடைந்தான்.

அங்கு எங்கும் ஸ்வாமி காணாததால் நீரில் அமர்ந்து, மூக்கை மூடிக்கொண்டு 'அய்யப்பா நீ வரவேண்டும்' என்று பிரார்த்தனை செய்ய வாரம்பித்தான். சிறிது நேரத்திற்குள்ளாகவே ஸ்வாமி அய்யப்பன் சுப்பனின் முன்தோன்றி அவனைத் தூக்கி நிறுத்தி "சுப்பா! ஏன்அழைத்தாய், என்ன வரம் வேண்டும்" என்றார். அதற்கு சுப்பன் "ஸ்வாமி! நான் தங்களைத் தரிசனம் செய்தேன் என்று எவ்வளவு சொன்னாலும்

(43-ஆம் பக்கம் பார்க்க)

# எளிதான அர்ச்சாவதாரம்



ஈஸ்வர ஸ்வரூபந்தான் பரத்வம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். (பிள்ளை உலகாசிரியர் அருளிச் செய்த தத்வத்ரயம்-ஈச்வர ப்ரகரணம் 182).

பரத்வமாவது ஸ்ரீமந் நாராயணன் பரமபதத்தில் (ஸ்ரீ வைகுண்டத்தில்) எழுந்தருளியிருக்கும் நிலை. வ்யூகமாவது திருப்பாற்கடலில் சயனித்திருக்கும் நிலை. விபவமாவது ஸ்ரீ இராம, கிருஷ்ண அவதாரங்கள் செய்த நிலை. அந்தர்யாமித்வமாவது "உடன்மிசை உயிரென கரந்தெங்கும் பரந்துள்ள" நிலை. அதாவது உடலில் உயிர் மறைந்து உறைவதுபோலே எங்கும் மறைந்து வியாபித்திருக்கும் நிலை. இதனாலேயே திருமாலுக்கு 'விஷ்ணு' என்று பெயர். 'வ்யாப்னோதி இதி விஷ்ணு' எங்கும் வியாபித்திருப்பவன்.

இவற்றுள் பரத்வமும், வ்யூகமும் இந்நில உலகிலுள்ளவர்களுக்கு இலக்காகதவை. விபவம் ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் அவதரித்த காலத்தே வாழ்ந்தவர்களுக்கே இலக்கானது. நம்போல்வார்க்கு நினைத்துப் பார்ப்பதொழிய செய்வது ஒன்றுமில்லை. அந்தர்யாமித்வமும் நமக்கு இலக்காகதது. அர்ச்சாவதாரம் ஒன்றே இந்நில உலகிலிருப்பவர்கள் கண்ணுக்கும், மனம், மெய், மொழி முதலியவற்றுக்கும் விஷயமாய் எளிமையானதுமான ஒன்றாகும். அதாவது அர்ச்சிக்கத் தகுந்த உருவத்தில் கோயில்களிலும், க்ருஹங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை.

இதையே ஸ்ரீ மணவாள மாமுனிகள்,

"செய்ய பரத்துவமாய்ச் சீரார் வியூகமாய்
துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள்- எய்துமவர்க்கு
இந்நிலத்திலர்ச்சாவதார மெளிதென்றான்
பன்னு தமிழ் மாறன் பயின்று"

என்று திருவாய்மொழி நூற்றந்தாதியில் (26-ம் பாட்டு) அருளிச் செய்கிறார். ஆராய்ந்து அருளிச் செய்யப்பட்ட தமிழ் வேதத்தையே நிருபகமாக உடைய நம்மாழ்வார் இவ்வாறு கூறியுள்ளார் என்று ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளுகிறார்.

ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம் (முமுக்ஷுப்படி) என்றும், இதுதான் பர, வியூக, விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படியிருக்கும் (முமுக்ஷுப்படி 140) என்றும், ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே (ஸ்ரீ வசன பூஷணம் 35) என்றும் ஸ்ரீ பிள்ளை உலகாசிரியர் அருளிச் செய்கிறார்.

ஆழ்வார்களுள் கடைக்குட்டியான திருமங்கையாழ்வார், தாம் அருளிச் செய்த "சிறிய திருமடலில்" "ஏரார் முயல்விட்டு காக்கை பின் போவதே" என்று அர்ச்சாவதார விஷயமாக சாதிக்கின்றார்.

வேட்டையாடுபவனுக்கு முயலைப் பிடிப்பது சுலபம். அது தரையில் நடமாடுவது. ஆனால் காக்கையோ சீக்கிரம் பிடிபடாமல் பறக்கும் தன்மையுடையது. எளிதில் பின் தொடர முடியாதது. ஆகவே எளிதான முயலைப் பிடிப்பதைவிட்டுக் கடினமான காக்கையைப் பிடிக்கப்போவது எவ்வளவு மதியீனம் என்று பாடுகிறார். இது ஆழ்வார் அருளும் த்ருஷ்டாந்தம் (உதாரணம்).

திவ்விய தேசங்களில் கோயில் கொண்டு அர்ச்சிக்கத் தகுந்த ரூபத்தில் கிட்டி அநுபவிக்க சுலபமாக இருக்கும் எம்பெருமானை விட்டு ஸ்ரீ வைகுண்டத்திலிருக்கும் நிலையிலுள்ள எம்பெருமானைத் தேடுவதே என்பது கருத்து. அர்ச்சாவதாரம் போக்யமாய் அநுபவிக்கத் தகுந்தது.

ஆனது பற்றியே "வைகுண்டவாஸேऽபி ந மேऽபிலாஷா" என்று ஸ்ரீவேதாந்த தேசிகரும், 'இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே" (திருமாலை 2ம் பாட்டு) என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும், 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ, வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன், தேனார் பூஞ்சோலை திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனாவேனே, (பெருமாள் திருமொழி 4-2) என்று குலசேகர ஆழ்வாரும் அர்ச்சாவதாரத்தில் ஈடுபட்டுப் பாடியுள்ளார்கள்.

ஆகவே நாமும் எம்பெருமானுடைய அர்ச்சாவதாரத்தில் ஈடுபட்டு எல்லா நலன்களும் பெறுவோமாக.

திரு S. திருமலை இராமஸ்வாமி,
திருப்புல்லாணி.



# நாட்டுப்புறப் பாடல்களில்

# திருமால் வழிபாடு

திரு. ஜா. மனுவேல், திருப்பதி

நாட்டுப்புற மக்களின் மரபு வழி பட்ட கலைகளையும், நம்பிக்கை களையும், வாய்மொழி இலக்கியங் களையும், புராணங்களையும், பழக்க வழக்கங்களையும் பற்றி அறிவியல் முறைப்படி ஆய்வது நாட்டுப்புற வியல் ஆகும். ஒரு நாட்டின் வாழ் வையும், வரலாற்றையும், குறையை யும், நிறையையும் தெளிவாகக் காட் டுவன நாட்டுப்புற இலக்கியங்க ளாகும். கிராமப்புறங்களில் வாழும் மக்களுக்குச் சம்பந்தப்பட்டதே நாட்டுப்புறவியல் என அறிஞர்கள் கூறுவர். தெலுங்கில் 'ஜானபத விக்ஞானமு' என்பர்.

## நாட்டுப்புறப் பாடல்கள் விளக்கம்:

நாட்டுப்புற மக்கள் தங்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையி லும் தொட்டில் முதல் சுடுகாடுவரை இன்பம் துன்பம் ஏக்கம் ஏமாற்றம் எள்ளல் போன்ற பல்வகை உணர்ச்சி களையும், இளமை, முதுமை என்று எவ்வித பேதமும் இல்லாமல் பாடல் களைப் பாடுகின்றனர். அத்தகைய பாடல்களையே நாட்டுப்புறப் பாடல் கள் என்கிறோம். தெலுங்கில் 'ஜானபதகேயாலு' என்பர்.

நாட்டுப்புறப் பாடல்கள் என்பது கேட்போருக்கு இனிமை பயப்பதாய் நெடுநாளாகப் பொதுமக்களிடையே நல்கி எழுத்துருவம் பெறாது வாய் மொழியாக நிலவி வாழையடிவாழை யாக வந்துகொண்டிருக்கும் கவிதை வடிவங்களாகும். இவைகள் மனித உணர்வின் வடிகாலாகவும், கட்டுப் பாடற்றக் கற்பனை நிறைந்த களஞ் சியங்களாகவும் திகழ்கின்றன.

நாட்டுப்புற மக்கள் எந்த மண்ணில் வாழ்ந்தனரோ, எந்த வேலையைச் செய்தனரோ, எதை உணர்ந்தனரோ, எதை மதித்துப்போற்றினரோ அவை எல்லாவற்றையும் கற்பனை நிறைந்த கவிதைகளாகப் பொழிகின்றனர். தமிழ் தெலுங்கு நாட்டுப்புறப் பாடல்களைப் பொதுவாக ஆறு பகுப் புகளாகப் பிரிக்கலாம். இப்பகுப்பு முறை ஒப்பாய்வு செய்வதற்கு ஏற்ற தான/முறையான பகுப்பாக அமை கின்றது.

1. சிறுவர் பாடல்கள்
2. தொழிற் பாடல்கள்
3. வேடிக்கைப் பாடல்கள்
4. காதற்பாடல்கள்
5. பக்திப் பாடல்கள்
6. ஒப்பாரிப் பாடல்கள்

தெலுங்கில் முறையே

1. பில்லல பாடலு
2. பணி பாட்டலு
3. வேடுக்க பாட்டலு
4. சுருங்கார பாட்டலு
5. பாரமார்த்திக பாட்டலு
6. கண்ணீட்டி பாட்டலு.

என்பவைகளாகும். இப்பகுப்புகளுக் குள் 'பக்திப் பாடல்கள்' என்ற தலைப்பில்மட்டும் இறைவனைப் பற்றிய பாடல்கள் எல்லாம் அடங்கி விடுகின்றன என்ற ஒரு நிலையான முடிவுக்கு வருதல் நன்று அன்று. மற்ற பாடல் வகையிலும் இறை வனைப்பற்றியபாடல்களும், புண்ணிய ஸ்தலங்களைப்பற்றிய பாடல்களும் அடக்கம் பெறுகின்றன.

## நாட்டுப்புறப் பாடல்களில் தொழிற் பாடல்கள்:

இன்று தொழிலே உலகத்தை இயக் கும் சக்தியாக இருந்து வருகின்றது. "வினையே ஆடவர்க்குயிரே" என் றும், 'செய்யும் தொழிலே தெய்வம்' என்றும் மக்கள் நம்புகின்றனர். மனித வளர்ச்சிக்கும், ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் தொழில் இன்றி யமையாதது என்பது தெளிவு. இத் தொழிலைச் செய்யும்போது வேலைச் சுமை தெரியாதிருக்கவும் வேலையின் வேகம் அதிகரிக்கவும் நாட்டுப்புற மக்கள் பல்வேறு பாடல்களைப் பாடு கின்றனர். இப்பாடல்களையே தமி ழில் நாட்டுப்புறப்பாடல்கள் என்றும், தெலுங்கில் 'பணிபாட்டலு' என்றும் அழைக்கின்றனர். இவ்வகைப்பட்டப் பாடல்களில் சில பக்திப் பாடல்களும் அடக்கம் பெறுகின்றன. குறிப்பாக சித்தூர் மாவட்டத்தில் உலகப்பிர சித்திப்பெற்ற திருமால் எழுந்தருளி யுள்ள திருப்பதி மலை இருப்பதால் இம்மலையைப்பற்றிய குறிப்பும், திரு மாலைப்பற்றிய குறிப்பும் தமிழ், தெலுங்குத் தொழிற்பாடல்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

## நாட்டுப்புறப் பாடல்களில் பக்திப்பாடல்கள்.

சூரியன், சந்திரன், விண்மீன்கள், மலைகள், நதிகள், மழை, இடி, மின்னல், காற்று முதலிய இயற் கையிலுள்ள புதுமைகளை மறுக் கவோ, மாற்றவோ முடியாது. காடு களை அழித்து உழுது பயிர் செய்து பலனடைய நினைக்கும் பலமற்ற மனிதன் தன்னைச் சூழ்ந்துள்ள அள

விட இயலாத இயற்கைச்சக்திகளால் தனக்கும் தனது பயிர்களுக்கும், ஆடு மாடுகளுக்கும் தீங்கு விளையுமெனப் பயந்தான். இவ்வாறு பயமடைந்த தன் மனதைத் திடமடையச் செய்யவும், தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை மகிழ்வு கொண்டு தனக்குத் தீங்கிழைக்காதிருக்கவும் உதவி செய்யுமாறும் துதி பாடினான். இதுவே மனிதன் தனக்குப் புறம்பாக உள்ள சக்திகளைப்பற்றி துதிக்க / நினைக்க ஆரம்பித்த வரலாறு என நாட்டுப் புறவியலர் கூறுவர். மனிதன் ஒவ்வொரு செயலைத் துவங்குவதற்கு முன் இறைவனை வேண்டுகிறான். இப்பாடல்கள் துதிப்பாடல்கள் என அழைக்கப்படுகின்றன. இவ்வகைப் பட்ட பாடல்கள் பல தமிழிலும், தெலுங்கிலும் பாடப்படுகின்றன.

"கந்தனே வாருமய்யா
கடம்பனே வாருமய்யா
பெரும்மாளே வாருமய்யா—எனது
பெருங்குறய தீருமய்யா

இதுபோன்ற பொருளுடையதொரு தெலுங்குப்பாடலும் இம்மாவட்டத்தில் பாடப்பெறுகின்றது.

"திருமல்லேசா திருமல்லேசா
திருப்பதி திருமல்லேசா
ராவய்யா மா இண்ட்ட
ராமாயணம் தீர்ச்சி போவய்யா"

"திருப்பதி திருமாலே; திருப்பதி திருமாலே வாருமய்யா; வந்து எங்கள் வீட்டு இராமாயணத்திற்குத் தீர்ப்பு சொல்லிவிட்டுப்போயா" என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

## நிகழ்ச்சிகளும் பாடல்களும் :

மார்கழி மாதம் பின்பனிக்காலம். அதிகாலையில் வாலிபன் ஒருவன் கபிலை இறைக்க இரண்டு காளைகளுடன் வயல்வெளிக்குப் புறப்பட்டான். செல்லும் வழியில் 'கள்ளு' விற்பவர் 'கள்' பானையுடன் எதிர்பட்டார். கள்ளைப் பார்த்ததும் மதி மயங்கிக் கள்ளை உண்டுவிடுகிறான். கபிலை இறைக்கக் கிணற்றுப்பக்கம் சென்றதும் உடல் தள்ளாடுகிறது. போதை அவனுடைய உடலை உல்லாசப் படகில் ஏற்றி உலா வருகின்றது. இருப்பினும் இளைய இரத்தமல்லவா! கபிலை இறைக்க ஆரம்பித்துவிட்டான். கபிலை இறைக்கும் முன் இறைவனை வேண்டுகிறான். ஏட்டறிவில்லாத இம்மக்கள் ஆபத்தான வேலைகளிலும், மயங்கிய நிலையிலும் இறைவனைத் துணைக்கு நாடுவது குறிப்பிடத்தக்கதாகும்.

"கண்ணுமல பொன்னுமல
கனிதரும் திரும்மல
திரும்மல மேலிருக்கும்
திருப்பதி பெரும்மாளே
கண்ணு மயக்கத்தால
கள்ளு குடிச்சதுண்டு
கவல நா ஓட்டும்போது
காவலுக்கு வந்தா லென்ன
காவலுக்கு வந்ததுண்டு
கய்னி நல்லா பாஞ்சதுண்டு"

இதுபோன்றதொரு தெலுங்குப்பாடலும் இம்மாவட்டத்தில் சேகரிப்புப் பணி மேற்கொண்டபோது கிடைத்துள்ளது.

"எகவ திரப்பதிலா
எகவ திரப்பதிலா
எக்குரா பாரி நாயினா
ஏடுகொண்டல எங்கன்னா
ஏளக்கு இச்சுட்ட ராவன்னா
கட்ட மீதே கல்லங்கடி
காபோள்ள பில்லா
அம்மேட்டி கல்லுதாகி
அந்த்தா மாயமயிரா
அக்கற ரார எங்கன்னா"

"மேல் திருப்பதிக்கு ஏறுவதுபோன்று பாரியை ஏறு; ஏழுமலையானே ஏற்ற வேளையில் வாரும். ஏரிக்கரையின் மீது கள்ளுக்கடை; கண் மயக்கத்தால் கள்ளை அருந்திவிட்டேன். இவ்வுலகம் மாயமாய் தோன்றுகிறது; துணைக்கு வருவாயாக" என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

ஒரு புறத்தில் ஆண்கள் நாற்றங்காலில் நாற்று பிடுங்கிக்கொண்டிருக்கையில் மறு பக்கத்தில் பெண்கள் நாற்று நட்டுக்கொண்டிருப்பர். பெண்களுக்கு வேலைச்சுமை தெரியாதிருக்கப் பாடல்களைப்பாடுவதுண்டு. இதனை நடவுப்பாடல் என்பர். தெலுங்கர் 'நாட்லு பாட்டலு' என அழைப்பர். இத்தொழில் பெண்களுக்கே உரியதாகையால் பாடல்களும் பெண்களுக்குரியதே. ஆண்களும் நாற்று நடுவதுண்டு. ஆனால் நடவுப் பாடல்களைப் பாடுவதில்லை. குனிந்து நிமிரும்போது 'ஏழுமலையானே, பெரும்மாளே' என்று சொல்வதுண்டு. நடவுப் பாடல்களில் திருமாலைப்பற்றிய குறிப்பும், அவருடைய அவதாரங்களைப்பற்றிய குறிப்பும், திருமலைப் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றன.

"ஆசக்கி கிளி வாங்கி கண்ணம்மா
பாசம் வெச்சி நா வளத்து—ஏம்
உள்ளம் பதக்குதடி—கண்ணம்மா
உயிரு துடிக்குதடி
ஊட்ட உட்டுருச்சி
ஊர்க்குரிவி பக்கம் சேந்து
உயரா பறந்திருச்சி
திருப்பதி மல மேலே
திரியுமா அந்த குரிவி
பெரும்மாளு பார்த்து விட்டு
புடிச்சி வெச்சிருப்பாரா"

இதுபோன்றதொரு தெலுங்குப் பாடலும் இம்மாவட்டத்தில் பாடப்பெறுகின்றது.

"கட்லு கொட்டேதி கலிகிரிகோனா
மோப்பு கட்டேதி மொகதாரிபேட்டா
ரானுபோனு ரங்கம்பேட்டன்னா
நே நன்ட்டினி ராஜா
கொலுவு தீரேதி கொத்த
கோட்டன்னா
ஆலினிடிச்சி பிட்டனிடிச்சி அந்த
மைன இல்லுனிடிச்சி
திரபதிக்கெள்ளி பராரய்யாவே
திருமல்லேசா சூசி யாடைத்தே
திருமலலோ கட்டி பெட்டுனோ"

"கவிகிரி காட்டில் விறகு வெட்டி, மொகதாரிபேட்டையில் சுமையாகக் கட்டி, இரங்கம்பேட்டையில் விறகு விற்று; அப்பணத்தை தீய வழிகளில் செலவிட்டு இறைவன்பால் பற்று இன்றி 'கொத்தகோட்டா' என்ற ஊரில் வழிபோக்கனாக அலைந்து திரிந்துக்கொண்டிருக்கிறான். மனைவியைவிட்டு, அருமையான பிள்ளைகளைக் கைவிட்டு, அழகான வீட்டை மறந்து திருப்பதி சென்று தலைமறைவாக வாழ்கிறாயே; உன்னை வெங்கடேஸ்வரர் சும்மா விடமாட்டார். அவர் கண்ணில்பட்டால் உன்னை திருமலையில் கட்டிப்போட்டு வைப்பாரா?" என்பது தெலுங்குப்பாடலுக்குரிய பொருளாகும்.

## களையெடுப்புப் பாடல் :

நாற்று நட்டு நாற்பது நாட்கள் கழித்துப் பயிர்களுக்கிடையே செழித்து வளர்ந்திருக்கும் களையை எடுத்து அப்புறப்படுத்துவர். இவ்வேலையும் பெண்களுக்குரியதே. பாடல்களும் பெண்களுக்கே கிடைத்த வரப்பிரசாதம் எனலாம். களையெடுக்கும்போது பாடும் பாடல்களையே 'களையெடுப்புப் பாடல்' என்பர். தெலுங்கர் 'கலுபு பாட்டலு' என்பர். இத்தகையப் பாடல்களிலும் திருமாலைப்பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. பாடல்களைப் பாடி வேலை செய்யும்போது வேலைச் சுமைத் தெரிவதில்லை. மனதில் ஆயிரம் துன்பங்கள் தேங்கிக் கிடந்தாலும் அவைகள் மனதைவிட்டு நீங்கிவிடுகின்றன, மறைந்துவிடுகின்றன.

வட இந்தியாவில் இமயமலை இயற்கை எழில் நடம்புரிந்து சிறப்புற்று விளங்கி வருதல்போன்று தென்னிந்தியாவில் நீலகிரிமலை சிறப்புற்று விளங்கி வருகின்றது. மேலும் ஆந்திராவில் திருப்பதி மலையில் வானளாவிய நீண்டு வளர்ந்த மரங்களும், அழகிய சுனைகளும், நீர்வீழ்ச்சிகளும் காணப்படுகின்றன. இம்மலையைப்பற்றிய குறிப்பு இம்மாவட்டத்தில் பாடப்பெறும் தமிழ், தெலுங்குக் களையெடுப்புப் பாடலில் காணப்படுகின்றது.

"கோவ கொடி புடுங்கி
ஓ வெண்ணிலா—ஏம் மதர
வெண்ணிலா-என்
கொயந்திக்கி நா ஏன கட்டி
ஓ வெண்ணிலா
பாவ கொடி புடுங்கி
ஓ வெண்ணிலா—ஏம் மதர
வெண்ணிலா-எம்
பாலகனிக்கி ஏன கட்டி
ஓ வெண்ணிலா
பூ வெச்சி பொட்டு வெச்சி
ஓ வெண்ணிலா—ஏம் மதர
வெண்ணிலா-நா(ன்)
சந்து முட்டோ போயி வந்தேன
ஓ வெண்ணிலா
சந்து வந்து மாந்த வந்து
ஓ வெண்ணிலா—எம் மதர
வெண்ணிலா-ஒரு
புள்ள கூட தக்கலியே
ஓ வெண்ணிலா
மனசு நொந்து வேதனபட்டு
ஓ வெண்ணிலா—ஏம் மதர
வெண்ணிலா-நா(ன்)
திருப்பதிக்கு போயி சேர்ந்தேன்
ஓ வெண்ணிலா
திருப்பதிக்கி போனதில
ஓ வெண்ணிலா—எம் மதர
வெண்ணிலா-நா(ன்)
திருப்பித்தியா திரும்பி வந்தேன்
ஓ வெண்ணிலா"

இதுபோன்றதொரு தெலுங்குப் பாடலும் சித்தூர் மாவட்டத்தில் களையெடுப்பின்போது பாடப்பெறுகின்றது.

"அத்தம்மா அபரஞ்சி
அத்தம்மா ஆரேணலு
காபுரம் சேசானு
காபோள்ள அத்தம்மா
மக திக்கி லேகுண்டா
மத்யானம் நே னுண்டனு
மானமு லேகுண்டா—நீ கொடுக்கு
மரசி திரகத்தாடே
ஜாலாரி பண்ட எக்கி
ஜம்மல் மடுகு தாட்டி
திரப்பதிக்கி போயி
திருநாள்ளு சூசி ஒஸ்தி
பாதலு பரிகெத்தாயி ஓரி நாயினா
பராரன மகோபொச்சே ஓரிநாயினா
அத்தா மாவா கலிசொச்சே ஓரி
நாயினா
அந்நமைன காபுரமாயே ஓரி
நாயினா

"அத்தையே அபரஞ்சி அத்தையே, ஆறுவருடம் குடும்பம் நடத்தினேன், காபு சாதியைச் சேர்ந்த அத்தையே, ஆடவன் பாதுகாப்பு இல்லாமல் ஒரு நாள் கூட நான் இருந்ததில்லை; உன் மகன் என்னை மறந்து அலைந்து திரிகிறான். ஜாலாரி பாறை ஏறி, 'ஜம்மல்மடுகு' என்ற ஊரைக் கடந்து, திருப்பதியை அடைந்து திருவிழாவைத் பார்த்துவிட்டு வந்தேன்; துன்பங்கள் நீங்கின. கணவன் வீடு திரும்பினான். அத்தையும் மாமனும் சமாதானமாயினர்; அமைதியான குடும்பம் உருவாயிற்று" என்பது தெலுங்குப்பாடலுக்குரிய பொருளாகும்.

## பரண் பாடல் :

ஒரு புறம் வயல்வெளிகளில் நடவு, களையெடுப்பு ஆனவுடன் மறுபக்கத்தில் சோளம், கம்பு போன்ற நன்செய் பயிர்கள் அறுவடைக்கு வந்துவிடும். விளைந்த பயிர்களுக்குப் பாதுகாப்பு மிகவும் அவசியமாகிறது. மாடுகள் முற்றியக் கதிர்களை மிதித்து நாசமாக்கிவிடும் என்பதற்காகவும், காக்கை, குருவி, கிளி போன்ற பறவைகள் சோளக்கதிர்களைத் தின்று தீர்த்துவிடும் என்பதற்காகவும் விவசாயிகள் பரண் அமைத்துக்கொண்டு காவல் இருப்பதுண்டு. தெலுங்கில் மஞ்செ, (அல்) பட்டடி என்பர். இந்நேரத்தில் பாடப்படும் பாடல்களைப் பரண் பாடல் என்பர். தெலுங்கர் மஞ்செ பாட்டலு என்பர். ஒரு குடிகாரனுக்கு வாழ்க்கைப்பட்ட ஒரு

(40-ம் பக்கம் பார்க்க)

# ஆண்டாள் கண்ட உலகளந்த உத்தமன்

பெரியாழ்வார் பெற்றெடுத்தப் பெண் பிள்ளையான ஆண்டாள் அருளிய திவ்ய பிரபந்தங்கள் திருப்பாவையும் நாச்சியார் திருமொழியுமாகும். இவை இறை மணம் கமழ்வன. இறைமை வாய்ந்தன. ஆழ்வார்கள் பதின்மரைப் போல ஆண்டாள் பாடிய பாடல்களில் பரம், வியூகம், விபவம், உள்ளுறை நிலை, அர்ச்சை ஆகிய இறைவனது ஐந்து நிலைகள் சிறந்து விளங்குகின்றன. பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோறாமே ஆள்கின்ற திருவரங்கத்து எம்பெருமானிடமும், வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கையனான திருவேங்கடத்துறை செல்வனிடமும், தெள்ளியார் பலர் கை தொழந்தேவனாய் வள்ளலான மாலிருஞ்சோலை அழகரிடமும் ஆண்டாள் ஆழங்கால்பட்டு பாடிய பாடல்கள் பல இருப்பினும் ஆண்டாளின் உள்ளப் பெருக்கில் பெருக்கெடுத்த பாடல்களில் கிருஷ்ணாவதாரமும் திரிவிக்ரமவதாரமும் பேரிடம் பெறுகின்றன. கண்ணன் என்னும் கருந்தெய்வக் காட்சியில் பழகிக் கிடப்பவளான ஆண்டாள் அந்த அவதாரத்துக்கு ஒப்பானதான வாமன-உலகளந்த உத்தமனின் வீர சரிதத்திலும் ஆழங்கால்பட்டு அருளிய பாடல்கள் சொலப்புகில் வாயமுதம் பரக்கும்.

ஆண்டாள் காட்டும் உலகளந்த உத்தமனைக் காணும்போது, குறளுருவாய் மூவடி மண்வேண்டி உலகளந்த தன்மை சிறப்புறுகிறது. இச்சிறப்பினை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

ஆண்டாள் அருளிய முதல் பிரபந்தமான திருப்பாவையில் மூன்று இடங்களில் உலகளந்த உத்தமனைக் காட்டுகிறாள்.

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று முதலில் எம்பெருமானது திருநாமச் சிறப்பைக் கூறுகின்றாள். 'அம்பரமூடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமான்' என்று அவன் அடியாட் பொருட்டு செய்த வீரச் செயலைச் சொல்லுகிறாள். 'அன்றிவ்வுலகளந்தாய் அடி போற்றி' என்று அந்த வீரச் செயலுக்கு அன்று வாழ்த்து கூறாத குறை தீர இன்று அத்திருவடிகளுக்கு மங்களா சாசனம் பாடுகிறாள். இம்மூன்றினையும் இணைத்துக் காணும்போது ஆண்டாள் உலகளந்த உத்தமனைக் கண்ட பாங்கு சிறந்து விளங்குகிறது.

முதலில், பாற்கடலில் பையத் துயின்ற பரமன் மகாபலியின் துன்பம் பொறுக்கமாட்டாது கூக்குரலிட்ட இந்திரன் முதலான தேவர்கள் பொருட்டு அழகிய வாமனனாய் வந்து சிறிய வடிவைக் காட்டி பெரியவனாகி, சிறு காலை பெருகாலாலே நீட்டி உலகையெல்லாம் அளந்து, அது காரணமாக உத்தமன் என்ற பெயர் பெற்றான். அதாவது தன்னை அழிய மாறியாகிலும் பிறர் வாழ வகை செய்பவன் உத்தமன். இந்நிலையில் மற்றவர்கட்கு உதவி செய்ததாக நினைக்கை அன்றிக்கே தன் பேறாக நினைததிருக்குமவனாகக் குறிப்பிடுவர் பெரியவாச்சான் பிள்ளை. உலகில் பொதுவாகப் பிறரைத் துன்புறுத்தித் தன் வயிறறை வளர்பபவர்கள் அதமன். பிறரும் வாழ வேண்டி தாமும் வாழ நினைப்பவர்கள் மத்யமன். அவவாறின்றியே, பிறர் வாழ தன்னை அழிய மாறியும் உதவுபவன் எம்பெருமான். அவனா ஒருவனே உத்தமனாவான். இப்படி உததமனான எமபெருமானுடைய பெயரை அனைபுக்குப் போக்கு வீடாகச் சொல்லி நோன்புக்கு ஒருப்பட வேண்டுகிறாள் ஆண்டாள். இதனால் 'உத்தமன் பேர்பாடி' எனப் பாசுரமிடுகிறாள். எம்பெருமானின் திருநாமச் சிறப்பைச் சொல்லும் போது 'கட்டிப் பொன் போலே அவன்; பணிப்பொன் போலே திருநாமம்' என்பர் பேருரையாளர். அதாவது கட்டியான பொன் போன்று பெருமதிப்பையுடையவன் எம்பெருமான். அப்பொன்னால் ஆன ஆபரணம் போன்றது அவன் திருநாமம். இதுபற்றியே 'உத்தமன் பேர்' என்பது பெரிய திருமந்திரமாகத் திகழ்கிறது. திருப்பாவையின் முதல் பாடலில் 'நாராயணன்' என்கையாலும், இரண்டாவது பாடலில் 'பரமன்' என்று அந்தத் திருமந்திரத்தின் பொருளான குண நிறைவைச் சொல்லுகையாலும், அம்மந்திரத்தில் சொல்லும் பொருளான பரம்பொருள், எங்கும் பரவி இருக்கும் தன்மையை நினைவூட்டும் உலகளந்த உத்தமனைச் சொல்லுகையாலும் திருமந்திரத்தைச் சொல்லுவதாகக் கூறுவர். இவ்வாறாகத் திருநாமச் சிறப்பை அநுபவிக்கிறாள் ஆண்டாள்.

அடுத்து, அவனது வீரச் செயலைச் சொல்லும் போது 'அம்பரமூடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமான்' என்று பாசுரமிடுகிறாள் ஆண்டாள். வேறு பயனைக் கருதுவதில் ஊற்றமுடைய இந்திரன் முதலான தேவர்களுக்காக ஆகாயம் உள்ளீடாக உள்ள எல்லா உலகையும் ஒரு வரம்பின்றி ஊடறுத்து விம்ம வளர்ந்தான் வாமனன். வளர்ந்ததோடல்லாமல் வரையாதே எல்லார் தலையிலும்

டாக்டர். மா. வரதராஜன்,
திருப்பதி.

திருவடிகளை வைத்துப் பூமியை அளந்து கொண்டான். இதனால் இன்னார் இனியார் என்ற வேறுபாடு தோன்றாது வேறு காரணமின்றியே இயற்கையான காத்தற்றன்மை யுடையவன் எம்பெருமான் எனக் காட்டுகிறாள் ஆண்டாள்.

மேலும், இவ்வீரச் செயலுக்குத் தோற்று 'அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி' என்று மங்களா சாசனம் பண்ணுகிறாள் ஆண்டாள். இத்தொடரில் பொதிந்த ஆண்டாளின் உள்ளப் பெருக்கை ஆசாரியர்கள் காட்டும் பாங்கு அநுபவிக்கத் தக்கது. காலம் கடந்த காட்சியின் அநுபவத்தைக் கூறும்போது 'அன்று' என்கிறாள். அதாவது 'மகாபலி உலகையெல்லாம் தன்னுடையது என்று அபிமானித்திந்த அன்று' என்றும், 'இவ்வபிமானத்தைத் தவிர்ந்து தன்னுடையது என்று எம்பெருமான் மகாபலியிடமிருந்து மீட்ட அன்று' என்றும், 'அவன் எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து அதனால் தூளிதானம் பண்ணின அன்று' என்றும் அக்காலத்து நிகழ்ச்சியின் சிறப்பினைக் காட்டுவர் ஆசார்யர்கள். உலகளந்த உத்தமனது திருவடியானது பெரிய பிராட்டியாருக்கும் பூமிப் பிராட்டியாருக்கும் பூத்தொடு மாபோலே கூசிப் பிடிக்கும் படியாக இருந்தது. அத்திருவடியாலே காட்டையும் மேடுகளையும் அளந்து அந்த ஆயாசம் தீர 'அடிபோற்றி' என்று பல்லாண்டு பாடுகிறாள் ஆண்டாள்.

'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று தன் மனத்தின் உறுதிப்பாட்டை உணர்த்தும் ஆண்டாள் தாம் அருளிய நாச்சியார் திருமொழியில் 11 இடங்களில் உலகளந்த உத்தமனை அநுபவிக்கிறாள். இவ்விடங்களிலும் திருப்பாவையில் காட்டியதுபோல் வாமன திரிவிக்ரம சரிதத்தின் சிறப்பைக் காட்டுகிறாள். வாமனனின் தன்மைகளைக் கூறும்போது 'வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்' எனப் பாசுரமிடுகிறாள். அதாவது வாமனனாய் கோலம் பூண்டபோது வாட்டமில்லாதிருந்தானாம். பரமபதத்தில் நித்ய ஸூரிகள் அநுபவிக்க இருந்த இருப்பு குலைந்து இவர்கள் நடுவே வந்தோமே என்று சிறிதும் வருத்தமில்லாமல் அவர்கள் நடுவில் பேரன்போடு கூடியிருந்தான். மேலும் தன்னுடைமையான உலகைப் பெறுகைக்குத்தான் இரப்பாளனாயுமிருந்தான். இப்படி பிறர்க்காகத் தன்னை இரப்பாளனாக்கினவன் திருவேங்கடத்தில் வாழ்கிறான் என்பதை,

' மாவலியை நிலங்கொண்டான் வேங்கடத்தே......'

என்றுபாசுரமிட்டுச் சொல்லுகிறாள். மேலும் வாமனனைக் காட்டியதன் வாயிலாகத் தன் இரப்புக்குக் காரியம் செய்ய மேகங்களை ஆண்டாள் வேண்டுகிறாள்.

வாமனனின் அழகைக் கூறும்போது, 'கொண்ட கோலக் குறளுரு' என்கிறபடியே திருப்பூணூலும், கிருஷ்ணாஜிநமும், பவித்திரமும், தண்டும் கொண்டு பரமபதத்திலிருக்கும் ஒப்பனையைவிட மேம்பட்டிருந்ததாகச் சுவைபடக் கூறுவர். அடுத்து, 'தேச மூன்னளந்தவன் திரிவிக்கிரமன் திருக்கைகளால் என்னைத் தீண்டும் வண்ணம் சாயுடை வயிறுமென தடமுலையும் தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே' என்னும் பாடலால் உலகளந்த பொன்னடியால் உலக மக்கள் பெற்ற பேற்றை நினைவூட்டி, அவன் திருக்கை பட்டு நிலை நின்ற புகழைப் பெற வேண்டுகிறாள் ஆண்டாள். இனிப் 'பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று எல்லாவுலகும் அளந்து கொண்ட வெம்பெருமான்' என்பதில் அழகிய வாமனனாய் அழகிய கையிலே மகாபலியிடமிருந்து நீரை ஏற்று உலகை அளந்து கொண்டதைக் கூறி, அச்செயலாலே தான் மற்றவர்கட்கு ஆட்படாது அவனுக்கே ஆட்பட்டிருத்தலைக் காட்டுகிறாள் ஆண்டாள். இச்செயலில் ஆண்டாள் ஈடுபட்டது போலவே, 'மூவடி தான் கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்' என்று பரகால நாயகியும் உருகுவது இங்கு நினைதற்பாலதாரும்.

இவ்வாறு ஆண்டாள் உலகளந்த உத்தமனின் வீரச் செயலில் ஈடுபட்டதோடல்லாமல் தான் வளர்த்த கிளிக்கும் அவன் திருநாமத்தைக் கற்பித்து வைத்தாள். அந்தக்கிளியானது கூட்டிலிருந்து எல்லாக் காலத்திலும் கோவிந்தா! கோவிந்தா! என்று சொல்லி வந்தது. மேலும் உணவைக் கொடுக்காமல் அதனைப் பட்டினியிட்டபோது 'உலகளந்தான்' என்று மூன்று உலகங்களையும் அளந்து திருவடிகளின் கீழே இட்டுக் கொண்டவன் நாமம் சொல்லி உயரக் கூவுமாம். இவ்விடத்தில் ஆண்டாள் வளர்த்த கிளிக்கு உலகளந்தானிடம் உள்ள ஈடுபாட்டைக் காட்டும் வகையில் அவன் திருவடிகளைப் பரப்பின எல்லாவிடத்திலும் இக்கிளியின் குரல் பரவினதாகக் கூறுவர் பேருரையாளர்.

உலகளந்த உத்தமன் பேரில் சோலைக் கிளியான ஆண்டாள் அநுபவமும், அவள் அநுபவத்தை அடியொற்றி அலற்றும் வளர்த்த கிளியின் அநுபவமும் என்னே!

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



# மறுப்புக் கட்டுரை

அன்புள்ள ஆசிரியர் அவர்கட்கு, அடியேனது பணிவான விண்ணப்பம். அண்மையில் ஸப்தகிரி மே மாதம் இதழினைக் காண நேரிட்டது. அவ் இதழின் 10வது பக்கத்தில் திருமதி கமலா மாரியப்பன் அவர்கள் குறிப்பிட்டுள்ள "அபிஷேகம் செய்வதன் கருத்து" என்பது பொருந்துவதாகப் படவில்லை.

சாதாரண வெள்ளைக் காகிதம் ஒன்று அரசாங்க அச்சு யந்திரத்திற்குள் நுழைந்து வெளியே வரும் போது அது எப்படி நோட்டு ஆக (கரன்சி) மதிப்பு பெறுகிறதோ அப்படித்தான் சாதாரண கற்சிலை கும்பாபிஷேக நீரால் (முறைப்படி யாகம் வளர்த்து மந்திரத்தால் செபிக்கப்பட்ட கும்பநீர்) நீராட்டப்பட்டதும் அதற்கு சக்தி பிறக்கிறது. அச் சக்தியே மக்களது வேண்டுகோளை ஈடேற்றும் திருவருளாய் வெளிப்படுகிறது. இது கும்பாபிஷேகத் தத்துவம்.

சாதாரண காகிதத்தில் நாம் எழுதிக் கையெழுத்து இட்டுத்தரும் ஒப்பந்தம் சமயத்தில் ஏற்க முடியாததாகவும், நீதி மன்றம் செல்ல முடியாததாகவும் ஆகிவிடுகிறது. ஆனால் பத்திரத்தில் Stamp Paper) எழுதும் ஒப்பந்தம் வலுப்பெறுவதாகவும், நீதி மன்றம் ஏறும் தகுதியும் பெறுவதுபோல், பக்தர்களது சாதாரண ஆராதனையைவிட அபிஷேக ஆராதனை இறைவனால் உடனே ஏற்றுக் கொண்டு பரிகாரம் காணக்கூடிய நிலை ஏற்படுகிறது. பத்திரத்தின் மதிப்பு (Value of Stamp Papers) மாறுவது போல் அபிஷேகத்தின் தன்மைகள் பன்னீர் அபிஷேகம், பால் அபிஷேகம், நெய் அபிஷேகம், இளநீர் அபிஷேகம், பஞ்சாமிர்த அபிஷேகம் என்று வேறுபடலாம், பலன்கள் வேறுபடலாம் அவ்வளவுதான்.

அடுத்து வரும் கருத்துக்கள் இவை.

1. சுத்தி நரும் இறைவன் சுத்தியாக இருத்தல்.

2. நம் உள்ளம் குளிர ஆண்டவனைக் குளிர வைத்தல்.

3. பக்தர்களது வினைகளை மேனியால் தாங்கிய இறைவன் மேனியை நீராட்டி அவரது வியர்வையை அவ்வப்போது அகற்றுதல்.

4. உயர் பொருள்களால் தன்னை அபிஷேகித்து நீராட்டியதால் அவர்களுடைய துன்பங்களும் இன்றோடு நீராய் கரைந்தது என்று உணர்த்தாமல் உணர்த்துவது.

இதனால்தான் இறைவனுக்கு 1. அபிஷேகப்பிரியன், 2. அலங்காரப் பிரியன், 3. அடியார்கள் பிரியன் என்ற பெயரும் வழக்கிலே வந்தது என்பதைக் காண வேண்டும்.

அதே போல் ஸப்தகிரி ஜூன் மாத இதழில் 15வது பக்கத்தில் திருமதி. கமலா மாரியப்பன் அவர்கள் தொகுத்துள்ள "பூணூல் அணிவதன் தத்துவம்" என்னும் குறிப்பும் முன்னுக்குப் பின் முரணாக உள்ளது.

பூண் + நூல் = பூணூல் என வந்தது. பூண் – என்றால் பூண்டவர்கள், உடையவர்கள், கொண்டவர்கள் என்பது பொருள். நூல் – என்றால் உயரிய வேதங்கள், ஆகமங்கள், இதிகாசங்கள், தர்ம நெறிகள், மாந்தர் வாழ்வுக்கு தேவையான வழி வகைகளை விளக்கும் ஏடு அல்லது புத்தகம் இவைகளே நூல் எனப்படும். ஆக உயர்ந்த நெறிகளை வேதங்களை கற்றவர்கள் அல்லது கொண்டவர்கள் என்பதின் அடையாளமே பூணூல் அணிவது ஆகும். நூலறிவைப் பூண்டவர்கள் என்பது கருத்து.

இரண்டாவது கருத்து :

நூல் என்றால் இழை. தனியிழை அறுந்துபடும். அதே இழை பல சேரும்போது உறுதிப்படுவது போல் பல நூல்களையும், வேதங்களையும், புராணங்களையும், இதிகாசங்களையும் கற்றுத்தேறும்போது அறிவு வலுப்பெறுகிறது என்பதை உணர்த்துவது பூணூல்.

மூன்றாவது கருத்து :

கலசங்களிலே நூலைச் சுற்றி மாவிலை வைத்து தேங்காய் வைத்து யாகசாலையில் மந்திரம் சொல்லி கலச நீரிலே சக்தியை சேர்க்கப்பயன் படுவது நூல். அதேபோல் மந்திர சக்திகளை மனித தேகத்திலே பாய்ச்ச வல்லதும், நிலைக்கச் செய்வதும் நூல். எனவேதான், பூணூல் அணிகிறார்கள். யாகசாலையில் இருந்து ஒரு நூல் சென்று கோபுர கலசத்தில் கட்டப்பட்டு இருக்கும் தத்துவம் மந்திரங்கள் அந்த நூல் மூலம் சென்று கோபுர கலசத்தை அடையட்டும் என்பதே பொருள். இறைச் சக்தியும், மந்திரமும் நம்மேனியை காக்கட்டும் என்பது கருப்பொருள்.

நான்காவது கருத்து :

வேத சாரங்கள், விளக்கங்கள் எல்லாம் நூலைப் போல நுண்ணியமாக இருக்கின்றன. அவைகளைச் சேர்த்தவனே பிறவிப் பயன் பெறுபவன். அவற்றைச் சேர்த்தவன், சேர்க்க முற்பட்டவன் என்பதே பூணூல் அணியும் தத்துவம்.

ஐந்தாவது கருத்து :

வலுவான வேலியை கால்நடைகள் தாண்டிப் பயிரை அழிக்க முடியாது. நூலறிவால் கற்று தர்ம நெறி நிற்பவனைக் காக்கும் வேலியாக

பூணூல் உள்ளது. அவனது உள்ளம் ஆசா பாசங்களுக்கோ, கீழ்த்தரமான எண்ணங்களுக்கோ ஈர்க்கப்படுவது இல்லை.

**ஆறாவது கருத்து :**

மின்சார சக்தியை கடத்தும் செப்புக்கம்பி போல், முறையோடு வேதம், இதிகாசம், நீதி நெறி கற்றவர்கள் தம் சக்தியை, அறிவை, நற்பலனைப் பிறருக்கும் பயன்படும் வகையில் பாய்ச்சுபவர்களாக அமைவார்கள். அதை வலுப்படுத்துவது பூணூல்.

**ஏழாவது கருத்து :**

ஒரு தடி அல்லது உலக்கை போன்றவற்றின் நுனிப்பாகத்தில் இரும்பு அல்லது பித்தளை உலோகங்களால் ஆன உருளை பொருத்தி இருப்பார்கள், அந்தத் தடி (பிரம்பு) அல்லது உலக்கை தேயாமல் அல்லது உடைந்து விடாமல் இருப்பதற்கு. அதற்கு பூண் என்று பெயர். அதுபோல் உள்ளம் ஆசாபாசங்களாலோ அல்லது காலக் கட்டத்தினாலோ உடைந்துவிடாமல் பாதுகாக்கும் பூணாக இருப்பதால் அதற்குப் பூணூல் என வந்தது.

**எட்டாவது கருத்து :**

நம் உடலில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. அதாவது மூலாதாரம், சுவாதிட்டாணம், மணிபூரகம், அநாதகம், விசுக்தி, ஆக்ஞை என்று. குண்டலி யோகம் மூலம் மூலாதாரத்தில் உறையும் ஜீவனை (ஜோதியை) தியானத்தின் மூலம் மேலேற்றி வரும் போது இறுதியாக உறையும் இடம் விசுக்தி. இது மார்புப் பகுதியாகும். அங்கிருந்து மேல் நோக்கி வெளிப் பட்டுத்தான் சிரசில் உள்ள ஆக்ஞை (நெற்றிப் பொட்டு) என்னும் இடத்தில் நின்று ஒளிரத் துவங்குகிறது. எனவே மார்புப் பகுதியில் நிற்கும் இறைச் சக்தி தூய்மை நிறைந்தது. அத்தூயவனுக்குத் தூய்மை சேர்க்கும் பொருட்டு மார்புப் பகுதியில் எப்போதும் புரண்டு கொண்டிருப்பது பூணூல். தூயவனோடு நம்மை இணைத்து தூயவராக்கும் பணியை செய்வது பூணூல்.

**ஒன்பதாவது கருத்து :**

பூணூலுக்கு முப்புரி நூல் என்றும் பெயர். அதாவது ஒன்பது இழைகள் மூன்று வீதம் மூன்றாகப் பிரிக்கப் பட்டு இருப்பதால் இதற்கு முப்புரி நூல் என்று பெயர். இம்மூன்று பிரிவுகளும் இச்சை, கிரியை, ஞானம் என்ற முச்செயலுக்கும் அடிகோலாய் இருப்பதால் இதற்கு முப்புரி நூல் என்று பெயர். (மூன்று செயல்களைச் செய்வதால்). அத்துடன் அல்லாது தம் செய்கையால் அணிந்தோரை இகம் பரம் என்னும் இரண்டு நிலைகளுக்குப் பின்னும் வீடு என்னும் இடத்தைச் சேர்த்து சுகம் பெற வைப்பதாலும் இதற்கு முப்புரி நூல் என்றும் பேர் விளங்குகின்றது.

**பத்தாவது கருத்து :**

நவரசங்களுடைய ஈர்ப்பினாலும் நவக்கோள்களுடைய பார்வை அல்லது தாக்குதல்களாலும் அணிந்தவர் பாதுகாககப்படுகின்றனர். இது கவசம் போல் விளங்குகிறது. மனம் புண்பட்டுப் போகாவண்ணம் பூணூல் காக்கிறது.

**பதினொன்றாவது கருத்து :**

எப்படி தீட்சை பெறாதவர்கள் சாற்றும் புஷ்பங்கள் இறைவனால் ஏற்கப்படுவது இல்லையோ அது போல் பூணூல் அணியாமல் நாம் செய்யும் எந்தச் சடங்கும் முழுமையடைவது இல்லை. உதாரணமாக எப்போதும் பூணூல் அணியாதவர் கள்கூட அவர்கள் வீட்டில் காலம் சென்றுவிட்ட ஒருவருக்கு நீர்க்கடன் செய்யும்போது அன்றைய தினம் மட்டும் பூணூல் அணிவித்து விரலில் தர்ப்பை மோதிரம் அணிவித்து சடங்குகளை புரோகிதர் செய்விக்கும் முறையை இன்றும் காண்கின்றோம். எனவே பூணூல் அணிவது பிராமணர்களுக்கு மட்டுமல்ல. எல்லா வகுப்பினருக்கும், தர்ம நெறிப்படி நின்று நிலவுபவர்கள் அணியும் நூல் என்பது மறுக்க முடியாத கருத்து ஆகும்.

இன்றைய இளைய தலை முறை பகுத்தறிவு என்னும் பெயரால் மூட நம்பிக்கைகள் என்று இறைவழிபாட்டையும், மதச் சடங்குகளையும் எதிர்த்து வரும் உலகமாகத் திகழ்கிறது. தூய்மையும் அசுத்தமும் கலந்தே எல்லா இடங்களிலும் உள்ளன. இருள் ஒளி கலந்தே ஒரு நாள் ஆகிறது. இன்ப துன்பம் கலந்ததே வாழ்வாகிறது. அதுபோல் தூய்மையான உடற்பகுதியில் அசுத்தப்பகுதியும் கலந்து வந்தது இயற்கையின் நியதியான இறைவன் படைப்பாகும். அசுத்தப் பகுதி அல்லாமல் உடல் ஆகிவிட முடியாது.

அந்தந்த உறுப்புகள் அதனதன் பணியைச் செய்கின்றன. மனிதன் உயர்வு எண்ணத்தாலும், சிந்தனையாலும், நல்லொழுக்கத்தாலும், நன்னடத்தையாலும் அடைகிறான். பலமான அஸ்திவாரம் பலமாடிக் கட்டிடங்களை உருவாக்குவது போல அறநெறிகளால் பண்பட்டவன் பரம்பொருளைக் காணும் அல்லது அடையும் நிலைக்கு உயர்கிறான். அந்த நிலைபேற்றுக்கு ஆட்படுத்தும் அடையாளம்தான் பூணூல் என்பது உண்மை. பிராமணர்கள் மட்டும் அணியும் நூல் அல்ல பூணூல். இங்கு அந்தணர்கள் என்று கோடிட்டுக் காட்டவும் முடியவில்லை. ''அறவாழி அந்தணன்'', என்றும் ''அந்தணர் என்போர் அறவோன்'' என்றும் தெய்வப் புலவர் பகர்வது தெளிவு. அறநெறி பிறழாத அனைவரும் அந்தணரே. அவர்கள அடையாளமாக அணிவது பூணூல் என்பது பொருந்தும். எனவே பூணூலை அணிந்துவிட்டால் மட்டும் மேல நிலைக்கு போக முடியாது, செயல்தான் முக்கியம்.

எனது கவலை ஸப்தகிரி இதழ் உயரிய தூய்மையானக் கருத்துக்களை- இளைஞர்களாலும் எவராலும் ஏற்றுக்கொள்ளப்படக் கூடிய கருத்துக்களை மட்டுமே வெளியிட வேண்டும் என்பது. அதுதான் நம் சமயச் சான்றுகளையும், மேன்மைகளையும் காக்கும் கவசமாக அமையும் என்று நம்புகிறேன்.

அன்புள்ள தங்கள்,
கவிஞர். சோமசுந்தரப்பெருமாள்
தங்கவயல்.



# நிழலின் அருமை

நிழல் என்றதும் மரத்தின் நிழல் நினைவுக்கு வருவது ஸஹஜம். நிழலின் அருமை வெய்யிலில் தெரியும் என்பர். மரங்கள் தம்மை அடைந்தவர்களுக்கு நிழலைக் கொடுத்தும் மற்றும் பல படிகளில் உபயோகமாகியும் பரோபகாரமே உருவெடுத்தவை என்று கண்ணபிரான் ஸ்ரீமத் பாகவதத்தில் (10-22-32/35) போற்றுகிறார். மரங்களின் நிழல்களை ஆழ்வார்கள் ஆங்காங்கு வர்ணித்துள்ளனர்.

**புன்னையின் நிழலில் பிரிதல் :**

தன்னை நைவிக்கி லேன் வல்வினை
யேன் தொழுதுமெழு
பொன்னை நைவிக்கும் அப்பூஞ்
செருந்தி மணநீழல் வாய்
என்னை நைவித்து எழில் கொண்
டகன்ற பெருமானிடம்
புன்னை முத்தம் பொழில் சூழ்ந்தழ
காய புல்லாணியே

என்பது பரகால நாயகியின் பாசுரம். "கொடிய பாவத்தை உடையேனான நான் என்னை சிதிலப்படுத்திக்கொள்வதனால் என்ன பயன்? நெஞ்சே! பொன்னுருவத்தைத் தோற்கடிக்க வல்ல ஸுர புன்னைப் பூக்களின் பரிமளமுள்ள நிழலிலே என்னை ஈடுபடுத்தி எனது மேனி நிறத்தைக் கவர்ந்து கொண்டு பிரிந்து போன எம்பெருமானுடைய இருப்பிடமாயும், முத்தரும்பின புன்னை மரச் சோலைகளாலே சூழப்பட்டு அழகிய தாயுமிருக்கிற திருப்புல்லாணியை வணங்குவோம், புறப்படு" என்றபடி.

---

*திரு. லா. ஸ்ரீநிவாஸன்,*
*புதுதில்லி.*

---

**முல்லையின் நிழலில் ஏமாறல் :**

எம்பெருமான் பரகால நாயகியைப் பிரிந்தான். கண்ணனோவென்றால் ஒருவளை வரும்படி சொல்லி ஏமாற்றினான்.

என்னை வருகவென்று குறித்திட்டு
இனமலர் முல்லையின் பந்தர்நீழல்
மன்னி அவளைப்புணரப்புக்கு
மறறென்
னைக் கண்டு உழறாநெகிழ்ந்தாய்
பொன்னிற வாடையைக் கையில்
தாங்கிப் பொய்யச்சம் காட்டி நீ
போதியேலும்
இன்னம் என் கையகத்து ஈங்கொரு
நாள் வருதியேல் என் சினம்
தீர்வன் நானே.

இது குலசேகராழ்வார் பாசுரம். இதன் பொருள்: என்னை இன்ன இடத்துக்கு வா என்று ஸங்கேதம்

செய்துவிட்டு, நிறைந்த மலர்களை யுடைய முல்லைப் பந்தலின் நிழலிலே வெகு நேரம் பதுங்கி நின்ற ஒருத்தியை ஸம்ச்லேஷிக்கப் போய், பிறகு என்னைப் பார்த்துக் கலங்கி அப்பாலே நழுவினாய்; பீதாம்பரத்தைக் கையிலே தாங்கிக் கொண்டு பொய்யாக நீ எனக்கு அஞ்சினதாக நான் பாவிக்கும்படி செய்து கொண்டு நீ என் கைக்கு அகப்படாமல் ஓடிப் போன போதிலும், இனி இங்கே என்னிடத்துக்கு ஒரு நாளாகிலும் வருவாயாகில் அப்போது என் கோபத்தைத் தீர்த்துக் கொள்வேன். இது ஏமாந்தவளின் சொல்.

**கான மர நிழலில் துயில்தல் :**

தசரதன் தனது மகன் காட்டுக்குச் செல்லும்போது புலம்பியதாக அதே ஆழ்வாரின் அநுபவத்தைக் காண்மின்.

மெல்லணை மேல் முன் துயின்றாய்
இன்று இனிப்போய் வியன் கான மரத்தின் நீழல்
கல்லணை மேல் கண் துயிலக்கற்
றனையோ? காகுத்தா! கரியகோவே.

**வாஸுதேவ மரநிழல் :**

वासुदेवतरुच्छाया नातिशीता न घर्मदा ।
नरकाङ्गारशमनी सा किमर्थं न सेव्यते ।।

என்று கருட புராணம் கூறும். வாஸுதேவனாகிய வ்ருக்ஷத்தின் நிழல் அதிகக் குளிரற்றது, மிகவும் உஷ்ணத்தையும் தராது. நரகமாகிய அக்னி ஜ்வாலையின் உஷ்ணத்தைத் தணிக்கச் செய்யும். அது எக்காரணத்தினால் எல்லா மனிதர்களாலும் அடையப்படவில்லை? என்றபடி.

இங்கு ஸ்ரீ பராசர பட்டரின் ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் (2-92) ச்லோகமும் அநுஸந்தேயம்.

प्रकुपित भुजगफणानामिव
विषयाणामह छायाम् ।
सति तव भुजसुरविटपिप्रच्छाये
रङ्गजीवित भजामि ।।

இதன் பொருள்—ஸ்ரீ ரங்க விமானத்தை உயிராகவுடைய பெருமானே; தேவரீருடைய திருத்தோள்களாகிற கல்ப வ்ருக்ஷத்தினுடைய நிழற்பாங்கு இருக்கும்போது, சீறின பாம்பின் படம் போன்றது துர்விஷயங்களினுடைய நிழலை நான் அடைகிறேன் என்றபடி. निवासवृक्षस्साधूनाम् (இராமன் ஸாதுக்களுக்கு தங்க நிழல் தரும் மரம் போன்றவன்) என்றும் बाहुच्छायामवष्टब्धो यस्य लोको महात्मनः (எந்த மஹாத்மாவினுடைய தோள் நிழலிலே உலகெல்லாம் ஒதுங்குகிறதோ) என்றும் சொல்லுகிறபடியே உலகுக்கெல்லாம் நிழல் கொடுத்தருளும் தேவரீர் இருக்க, ஆடுகிற பாம்பின் நிழலில் ஒதுங்கி விடாய் கெட நினைக்குமாபோலே விஷயாந்தரங்களின் நிழலிலே பாவியேன் ஒதுங்கிக் கிடக்கிறேனே! என்று இன்னாதாராகிறார் என்க. भुजसुरविटपि என்ற விடத்து "கற்பகக்காவன நற்பல தோளற்கு" (திருவாய்மொழி 6-6-6) என்ற பாசுரம் நினைக்கத்தக்கது.

गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वा वनमाश्रिता।
नाहारयति सन्त्रासं बाहू रामस्य संश्रिता ।।

(அயோ 66-20) என்றார் வால்மீகியும். இயற்கையாலே பயங்கரமான வனத்தையடைந்த ஸீதை, யானைத்திரளையும், ஸிம்ஹத்திரளையும், புலித்திரளையும் பார்த்தும், பெருமாளின் தோள்நிழலை ஆச்ரயித்திருந்ததால் பயமடையவில்லை என்றபடி.

**ஆலமர நிழலில் உபதேசம் :**

நெறி வாசல் தானேயாய் நின்றானை, ஐந்து
பொறி வாசல் போர்க்க தவம் சார்த்தி, அறிவானாம்
ஆலமர நீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த
ஆலமமர் கண்டத்தரன்.

என்பது முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையார் பாசுரம். இதன் கருத்தாவது: முன்னொரு காலத்தில் ஆலமரத்தின் நிழலிலே இருந்து கொண்டு அகஸ்தியர், புலஸ்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர் என்ற நான்கு சிஷ்யர்களுக்கு தர்மோபதேசம் செய்தவனும், விஷத்தைக் கழுத்தளவிலே அடக்கிக்கொண்டவனுமான சிவன் செவி, வாய், கண், மூக்கு, உடல் என்கிற ஐந்து இந்த்ரியங்கள் செல்லும் வழியில் வலிய கதவுகளையிட்டு அடைத்து, உபாயமும் உபேயமும் தானேயாயிருக்கும் எம்பெருமானை அறிந்துவிட்டதாகச் செருக்குற்று நிற்கிறானே! இஃதென்ன பேதைமை என்றபடி.

திருமழிசையாழ்வாரும் நான்முகன் திருவந்தாதியில் (17) இந்த வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்தார்.

எம்பெருமானுடைய இன்னருளால் ஜ்ஞானவிகாஸம் பெற்ற நானே அவனுடைய ஸ்வரூபம், ரூபம், குணம், சேஷ்டிதம் முதலியவற்றை நன்கு அறியாமல், கடலில் நீஞ்சிக்கரையேற மாட்டாதே கடநது அலைவாரைப் போலே அலையா நிற்க, தன் முயற்சியாலே சிறிது ஜ்ஞானம் பெற்ற இவன் எங்ஙனே அறியவல்லான்? தான் தெரிந்து கொள்ளவும் வாய்ப்பில்லாதிருக்கப் பிறருக்கும் உபதேசிக்க இழிகிறானே! இது என்ன அறிவு கேடு! என்றபடி. இவ்வர்த்தம் "அரன் அறிவானாம்" என்ற சொற்றொடரின் காம்பீர்யத்தில் த்வனிக்கும்.

வெண் குடை நிழலும் கானமர நிழலும்:

தன்னைத் திரும்பி அழைத்துச் செல்ல வந்த பரதனை ஸமாதானப்படுத்தி சக்ரவர்த்தி திருமகன் கூறுகிறார்.

छायां ते दिनकरभाः प्रबाधमानं
वर्षत्रं भरत करोतु मूर्ध्नि शीताम् ।



சொர்க்க பிரம்மேஸ்வர ஆலயம்-ஆலம்பூர்

एतेषामहमपि काननद्रुमाणां
छायां तामतिशयिनीं शनैः श्रयिष्ये ॥

(அயோ. 107-18)

"பரதனே! சூரியனின் கிரணங்களைத் தடுக்கும் அரசனின் வெண்குடை, உனது தலையின்மேல் குளிர்ச்சியான நிழலைப் பரவச் செய்யட்டும். நானும் சிறிது சிறிதாக இந்தக் காட்டிலுள்ள மரங்களின் அடர்ந்த நிழலை அடைவேன்" என்றபடி.

குடை நிழலில் கிழத்தனம்:

தசரதன் இராமனை யௌவராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து வைக்க நினைத்து சபையில் இவ்விதம் கூறுகிறான்.

इदं शरीरं कृत्स्नस्य लोकस्य चरता हितम् ।
पाण्डुरस्यातपत्रस्य छायायां जरितं मया ॥

வெண் கொற்றக் குடையின் நிழலின்கீழ் உலகம் யாவற்றுக்கும் நன்மை செய்தே இந்த என் சரீரமானது கிழத்தனத்தை அடைந்துவிட்டது என்றபடி.

குடைநிழலில் வீற்றிருத்தல்:

தமது பாசுரங்களைப் பாடவல்லவர்களுக்குக் கலியன்,

கண்டார் வணங்கக்களி யானை மீதே
கடல் சூழுலகுக்கொரு காவலராய்



ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயம் - குமாரவயலூர்
திரு. எம். ராஜகோபாலன் - சென்னை

விண் தோய்நெடு வெண்குடை
நிழல்கீழ்
விரிநீருல காண்டு விரும்புவாரே.

என்றும்,

பார்மிசை அரசராகி கோவிள மன்னர்
தாழக்
குடைநிழல் பொலிவர் தாமே.

என்றும் அரசனாக வெண் குடை நிழலில் வீற்றிருத்தலைப் பலனாக அருளினார்.

அதே ஆழ்வார் அன்னப் பறவைகள் அரசர்களைப் போல வீற்றிருக்கும் அழகை அருள்வதைக் காண்மின்.

அன்னமென் கமலத்தணிமலர்ப்
பீடத்தலை புளலிலைக்குடை நிழல்
செந்நெ லொண்கவரிய யசைய
வீற்றிருக்கும்
திருக் கண்ணங்குடியுள் நின்றானே.
(பெரிய திருமொழி 9-1-5)

ஓர் அரசன் வெண் சாமரை வீச கொற்றக்குடை நிழலிலே சிங்காசனத்தின்மீது வீற்றிருத்தல் போல, திருக்கண்ணங்குடியுள் அன்னப் பறவைகள் செந்நெற்கதிர்களாகிய சாமரை வீச, இலைக்குடையின் கீழ்த் தாமரை மலர்களிலே வீற்றிருக்கின்றன என்றபடி.

நிழலைப்போல் பிரியாமை :

அந்தணர் அமுதத்தினை,
சாயைபோ லப்பாடவல்லார் தாமும்
அணுக்கர்களே.

என்று பலச்ருதி கூறியருளினார் பெரியாழ்வார் தம்முடைய கடைசிப் பத்துக்கு. தம்முடைய நிழல் தம்மை விட்டு இறையும் அகலாதது போல எம்பெருமானைப் பாடுவார்கள் அவ்வெம்பெருமானைவிட்டுச் சிறிதும் அகலாது அவனுக்கே அத்தாணிச் சேவகம் செய்யப் பெறுவர் என்றபடி.

இங்கு ஒரு ஐதிஹ்ய முண்டு. எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பியைத் திருவடி தொழ எழுந்தருளின போது சிலர் எம்பாரிடம் வந்து "சாயை போலப் பாடவல்லார்" என்ற அடியின் கருத்தை அருளிச் செய்ய வேணும் என்று ப்ரார்த்திக்க, எம்பார் "எம்பெருமானாரிடத்தில் இதன் பொருளை நான் கேட்டதில்லை. இப்போது அவரைக் கேட்டு உங்களுக்குச் சொல்லுவோமென்றால் அவர் இங்கில்லை. ஆகிலும் நான் உங்களுக்கு இப்போதே சொன்னேனாக வேணும்" என்று சொல்லி, எம்பெருமானாருடைய திருவடி நிலைகளைத் தம் திருமுடியின் மேல் வைத்துக் கொண்டு, "இப்போது உடையவர் எனக்கு அருளிச் செய்தார், சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று சொல்லி, அந்தணர் தம் அமுதத்தினைப் பாடவல்லார் போலத் தாமும் அணுக்கர்களே" என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுங்கள் என்று அருளிச் செய்தாராம்.

எம்பெருமானின் தேவிகளான ஸ்ரீ, பூ, நீளாதேவிகள் அவனுக்கு நிழல் போன்றவர்கள் என்று நம்மாழ்வார் திருவிருத்தத்தில் இவ்விதம் அருள்கிறார்.

குழற்கோவலர் மடப்பாவையும் மண்
மகளும் திருவும்
நிழல் போல்வனர்.

ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்னும் தேவிமார் மூவரும் எம்பெருமானை விடாது தொடர்ந்து நிற்பது பற்றியும், அவனது குளிர்ச்சிக்குக் காரணமாயிருப்பது பற்றியும், அவனுக்குப் பரதந்த்ரைகளாய் இருப்பதைப் பற்றியும், அவனுக்கு நிழல் போன்றனர் எனப்பட்டனர் இங்கு என்று அறியத் தக்கது

ஸீதையைப் பாணிக்ரஹணம் செய்து கொடுக்கும் ஜநக சக்ரவர்த்தி திருமகனைப் பார்த்துக் றிய கீழ்வரும் ச்லோகம் ப்ரஸித்தமானது.

इयं सीता मम सुता सहधर्मचरी तव ।।
प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना।
पतिव्रता महाभागा छायेवानुगता सदा ।।

"என் பெண்ணான இந்த ஸீதை உனது தர்மபத்னியாகப் போகிறாள். இவளுடைய கைத்தலத்தை உனது கைத்தலத்தால் பற்றி இவளை ஏற்றுக்கொள். உனக்கு மங்களம் உண்டாகுக. பதிவ்ரதையும் பாக்யசாலி

(29-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ சீதா கல்யாணமும், ஸ்ரீ ஆண்டாள் கல்யாணமும்

ஸ்ரீ ராமாயணத்திலே ஸ்ரீ ராம ஜனனமும், ஸ்ரீ ஸீதா கல்யாணமும், ஸ்ரீ மஹாபட்டாபிஷேகமும் விசேஷமாய்கொண்டாடப்படுகிறது. தர்மமே ஸ்ரீ ராமனாக அவதரித்து, ஸத்யத்தைக் காப்பாற்றப் பாடுபட்டபோது, அவைகளையெல்லாம் செயல்படுத்தும் கருவியாக இருந்த ஸ்ரீஸீதையும் அவனும் திருமணப்பந்தத்தில் ஒன்றாக இணைந்தது எவ்விதத்திலும் பொருத்தமே!


திருமதி. மைதிலி வேணுகோபால்

சென்னை.


எம்பெருமான், ஸத்ய தர்மத்தின் வித்து. இதை ஆண்டாள், "வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை" என்று பாடுகிறாள். இதைவிடப் பொருத்தமாக, வேறு யாருமே பாட முடியாது. திருக்கோட்டியூர் கோபுரத்தின் மேலேறி நின்று கொண்டு, இப்படி உரத்த முழக்கமிட, நான் தயார். கண்ணன் கபட நாடக சூத்ரதாரி என்கிறோமேயொழிய, உண்மையில், ஸ்ரீராமனே கபட நாடக சூத்ரதாரி. அவன் செய்த சேஷ்டிதங்கள் எல்லாம், தர்மவித்துக்களை விதைக்கச் செய்து, பின் நீர் வார்த்துப் பேணிப் பாதுகாத்து, கடைசியில் பொன்போன்ற தானிய மணிகளை அறுவடை செய்ததற்கொப்பாகும். அதை எடுத்துக் குறிப்பாகக் காட்டும் முகமாகத்தான், ஜனகர் பூமியைக் கலப்பையால் உழுகையில், ஸீதை கிடைத்தாள் அவன் மேகம், இவள் மின்னல். மின்னலின்றி வருகின்ற மேகம் மழை பொழியாது. பிராட்டியைப் பிரிந்தால், இவனும் வெறும் பூஜ்யந்தான். காய்கின்ற பயிர்களுக்காகப் பெய்யும் மழையாக ஸீதை இருந்தாள்.

ஜனகருக்குத் தன் பெண்ணைப் பற்றி சொல்ல முடியாத பெருமை. கூடவே கவலையும்கூட. ஜனகரோ ஞான அனுஷ்டானங்களில் மிகவும் மேம்பட்டவர். அவரது பெண் வேறெப்படி இருக்க முடியும்? ஸ்ரீ பூமி, நீளை மூவரின் அம்சமாகவே தான் ஸீதை அவதரித்தாள். இவளும் ஞான, பக்தி, அனுஷ்டான வைராக்கியங்களில் மிகச் சிறந்தவள்.

"ராம! இயம் ஸீதா, மம சுதா" என்கிறார் ஜனகர், மிகக் கர்வமாக!

உண்மையில் ஸீதை இவரது பெண்ணா? ஸக்ஷாத் பெரியபிராட்டி பாசமாகப்பட்டது கண்களை மறைக்க, 'என் பெண்' என்று சொல்கிறார்.





"ஸஹதர்மசரீ தவ" 'உன்னுடன் ஸம்ஸாரத்தில் கூடவே நடப்பாள். பரத்வத்தைக் காட்டாது, நீ செய்யப்போகும் அரிய செயல்களுக்கெல்லாம் முதுகெலும்பாக நிற்பாள்.'

"பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா" 'இவளுடைய திருக்கைகளை உன் திருக் கைகளால் பிடித்துக்கொள். இவளுடைய திருக்கைகளை ஏன் முதலில் குறிப்பிடுகிறேன் என்றால், அவளுடையது செந்தாமரைக் கை. உன்னுடையதோ வெறுந் தாமரைக் கைதான். உன்னிடம் அபயம்என்று வந்தால்தான் நீ அபயமளிப்பாய். ஆனால் அவளோ, அபயம் கேட்காத போதுகூட அபயமளிக்கும் அன்பு மயமானவள்.

"பத்ரம்தே" – 'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு, பல கோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன் செவ்வடி செவ்வித் திருக்காப்பு. அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு, வடிவாய் நின் வல மார்பினில் வாழும் மங்கையும் பல்லாண்டு!' என்று மகளுக்கும் மாப்பிள்ளைக்கும் ஆசிர்வாதம் செய்கிறார்.

அந்த திவ்ய தம்பதிகளுக்குப் பல்லாண்டு பாட, இவருக்கு ஞானமோ, வயதோ போதுமா? அவற்றையெல்லாம் கடந்த பக்திதான் அப்படிப் பாடவைக்கிறது.

கபடநாடக சூத்ரதாரியான ஸ்ரீராமன் எல்லோருடைய ஆசிர்வாதங்களையும் ஏற்று, எல்லோரையும் நமஸ்கரிக்கிறான்.

இனி ஆண்டாள் கல்யாணத்தைப் பார்ப்போம் ஆண்டாளுக்கு முதலில் ஆத்மவிவாஹம் நடந்து விடுகிறது. பிறகுதான் ஊரறியத் திருமணம்.

ஸீதைக்கோ, சுந்தரகாண்டத்தில் ஆசார்ய ஸ்தானத்தில் இருந்து அனுமன் ஸ்ரீராமநாமம் பொறித்த மோதிரத்தைக் கொடுக்கையில், நடத்தி வைக்கிறான் ஆத்ம விவாஹத்தை. ஊரறியத் திருமணம் பாலகாண்டத்திலேயே முடிந்து விடுகிறது.

எம்பெருமானைத்தவிர, வேறெந்த நினைவுமே இல்லாத ஸஜ்ஜீவனாகிய ஸீதையை, கபட நாடக சூத்ரதாரியான ராமன் வேண்டுமென்றே, மாரீசன் என்கிற மாயையில் அழுத்துகிறான்.

நல்லவன், ஸாது என்று பெயர் பெற்றிருந்த ஸ்ரீராமனே இவ்வளவு கபட நாடகங்கள் நடத்தியிருக்கிறானெனில், கபட நாடகங்களை வெளிச்சம் போட்டுக் கொண்டே, சிரித்துக் கொண்டே நடத்தும் கண்ணனை நம்பலாமோ?

"கண்ணா! உற்றோமேயாவோம்! உனக்கே நாம் ஆட்செய்வோம்! மற்றை நம் காமங்கள் மாற்று கண்ணா!" என்று பிரார்த்தித்து மாயையிலிருந்து தப்பித்து விட்டாள் ஆண்டாள்.

வாய்நல்லார் நல்ல மறையோதி
மந்திரத்தால்
பாசிலை நாணல் படுத்துப் பரிதி
வைத்து
காய்சின மாகளிறன்னான்
என்கைப் பற்றி
தீ வலஞ்செய்யக் கனாக்கண்டேன்
தோழீ! நான்!

மாங்கல்யதாரணம் ஆகிவிட்டது. திருமாங்கல்யச் சரடு ஆண்டாளின் சங்கு போன்ற கழுத்திலே மின்னுகிறது. எப்படி மின்னுகிறது என்கிறீர்கள்? திருமந்திரம் போலே மின்னுகிறதாம். உயர்ந்த குலம், ஐச்வர்யம், பரமபதத்தையும் எம்பெருமானுடைய கிருபையையும், பகவதனுபவத்திற்கேற்ற சக்தி போன்ற எல்லாவற்றையும் கொடுக்கக் கூடியதான திருமந்திரம் போன்றதான திருமாங்கல்யத்தை எம்பெருமான் ஆண்டாளுக்கு அணிவிக்கிறான். இவள் எம்பெருமானுக்கு 'அநந்யார்ஹ பூஷை.'

அவள் கையைப் பிடித்துக்கொண்டு எம்பெருமான் அக்னியை சாக்ஷியாக்கி வலம் வருகிறான்.

ஆண்டாளின் கையைப் பற்றியதுமே கண்ணனுக்குக் கர்வம் ஓங்குகிறது. எப்படி? மிக்க சினத்தையுடைய மத்தகஜம் போன்ற செருக்கோடு வலம் வருகிறான். வெண்ணெய் திருடிய கையால் வெண்ணெய் போன்ற பாசுரங்கள் பாடியவளின் கையைப் பற்றுகிறான்.

குழந்தைகள் மண்ணைத் தின்றால் மண் செரிக்க உடனே தாய் வெண்ணெயைத் தின்ன வைப்பாள். கண்ணனே, பிரளய காலத்தில் மண்ணை உண்டானல்லவா? அந்த மண் செரிக்க வேண்டுமே என்றுதான் இப்போது, வெண்ணெயைத் தாழி தாழியாக உண்டான். அதைப்

(28-ஆம் பக்கம் பார்க்க)

# முருகப்பெருமானின் எழில்மிகு தோற்றம்



முருகப்பெருமான் தமிழ்மக்களின் தனிப்பெருங் கடவுளாகவே போற்றப்படுகிறார். தமிழில் தோன்றிய மிகப்பழமையான நூலான தொல்காப்பியத்தில் குறிஞ்சி நிலத்திற்குரிய இறைவனாகவே முருகன் குறிப்பிடப் பட்டுள்ளார். இப்பெருமானின் சிறப்பைத் தமிழில் எழுந்த இலக்கிய நூல்கள் பரவலாகப் புகழ்ந்துள்ளன. தமிழிலக்கிய நூல்களில் வேலவன், கந்தன், குமரன், குகன், விசாகன், சுப்பிரமணியன், சரவணபவன் போன்ற எண்ணற்றப் பெயர்களால் பெருமைப்படுத்தப்பட்ட இப்பெருமானின் எழிலுருவ அமைப்பைக் காணலாம்.

**உருவமைப்பு :**

சிவந்த ஆடைகளை அவன் தரித்துள்ளான். சிவந்த அடிப்பகுதியையுடைய அசோகத் தளிர்கள் அவனது காதுகளில் மிளிர்கின்றன. இடையில் கச்சையும், திருவடிகளில் வீரக்கழலும், தலையில் வெட்சிமாலையும் இடம் பெற்றுள்ளன. அவன் இசைப்பது குழல், கொம்பு போன்ற இசைக் கருவிகளை. கோழி அவனது கொடியாகவும், ஆட்டுக்கிடா, மயில் ஆகியன அவனது வாகனங்களாகவும் விளங்குகின்றன. நெடிய இத்திருவுருவினனின் தோள்களில் தொடியும், திருவயிற்றில் குறும்பொறியும் அணி செய்கின்றன. குளிர்ச்சி பொருந்திய மெல்லிய ஆடை இடையில் துவளுகிறது. இதுவே நக்கீரரின் திருமுருகாற்றுப்படை காட்டும் முருகனின் எழிற்கோலம்.

செய்யன் சிவந்த ஆடையன்
செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங்
காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக்
கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல
லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியன்
தோளன்
நரம்பு ஆர்த்தன்ன இன்குரல்
தொகுதியொடு
குறும் பொறிக்கொண்ட நறுந்தண்
சாயல்
முருங்கில் கட்டிய நிலனேர்பு
துகிலினன் (206-214)

அவனது திருமுடியில் பிரகாசிக்கும் கிரீடத்தை மின்னலையொத்த ஒன்பது மணிகள் அணி செய்கின்றன. நெற்றியில் தேய்பிறை போன்ற திருவடிவுடைய நீற்றுக்கீற்றும், அன்று மலர்ந்த மலர்கள் போன்ற திலகமும் ஒளிவிடுகின்றன. செந்தாமரைப் போல் மலர்ந்த பன்னிருத்திருவிழிகள் அருள் வெள்ளத்தைப் பொழியும். சூரியன்போல் பிரகாசிக்கும் மகரகுண்டலங்கள் அவனது காதுகளை அலங்கரிக்கின்றன. நிலவின் ஒளி போன்ற புன்முறுவலை அவனது செவ்வாய்களில் காணலாம். பிறவி என்ற பிணியிலிருந்து விடுதலையளிக்கும் நிழல் போன்ற குளிர்ந்த சொற்களை அவனது வாய் வெளிப்படுத்தும்.

---

**திரு எம். ராஜகோபாலன்**
*சென்னை-90.*

---

இக்காட்சியைக் கந்தர் கலி வெண்பாவில் குமரகுருபரர் அளிக்கிறார்.

“ மின்னுருவம் தோய்ந்த நவரத்நச்
சுடர்மணியாற் செய்த பைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும்-
தேய்ந்த பிறைத்
துண்டம் இருமூன்று நிரை தோன்றப்
பதித்த அனைய
புண்டரம் பூத்த நுதற் பொட்டழகும்
விண்ட



தேவியருடன் வேலவர்-எட்டக்குடி.

பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு
பூத்தாங்கு
அருள்மொழியும் கண்மலர் ஈராறும்-
பருதி
பலவும் எழுந்து சுடர் பாலித்தாற்
போலக்
குல்வு மகரக்குழையும் நிலவு உமிழும்
புன்முறுவல் பூத்து அலர்ந்த
பூங்குமுதச் செவ்வாயும்



மருதாசல மூர்த்தி - மருதமலை.

செம்மவிடாய் தீர்க்கும்
திருமொழியும் ''

முருகப்பெருமான் ஆறுமுகங்களுடனும், பன்னிரு கைகளுடனும் தோன்றுவதாக இலக்கியங்களில் அதிக அளவில் குறிப்பு உள்ளது. இதனையே சிலப்பதிகாரம்,

'' அணிமுகங்கள் ஓர் ஆறும் ஈராறு
கையும்
இணையின்றித் தானுடையான் ''

என்று குறிப்பிடும்.

## ஆறு முகங்கள்

முருகனின் ஆறுமுகங்களுள் ஒன்று உலகத்தில் அஞ்ஞான இருளை அகற்றிக் குற்றங்களை நீக்கும்: வரம் வேண்டும் அடியார்களுக்கு மற்றொன்று வரமளிக்கும். மூன்றாம் முகம் அந்தணர்கள் நடத்தும் யாகங்களுக்குப் பாதுகாவலாக உள்ளது. நுண்ணிய உண்மைகளை நான்காவது முகம் உணர்த்தும். சினத்துடன் தீயவர்களை ஒடுக்கும் செயல் ஐந்தாவது முகத்தின் தொழிலாகும். கொடிபோல் மெல்லிய இடையுடைய குறமகளான வள்ளிக்கு ஆறாவது முகம் இன்பம் அளிக்கும்.

மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்
ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது
ஒழுகிக்
காதலின் உவந்துவரங் கொடுத்தன்றே
ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே
ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசை விளக்கும்மே
ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சம
முருக்கிக்
கறுவு கொள் நெஞ்சமொடு களம்
வேட்டன்றே ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல்
நுசுப்பின்
மடவரல் வள்ளியோடு
நகையமர்ந்தன்றே
(நக்கீரர்-திருமுருகாற்றுப்படை)

குமரகுருபரரின் கந்தர் கலிவெண்பாவின் முருகப்பெருமான் ஆறு திருமுகங்களின் செயல்கள் வேறுவிதமாக விளக்கப்பட்டுள்ளன. முதல் முகம் அவுணர்கள் விரும்பிப் போற்றும் சூரபத்மனை ஒடுக்கும்; அடுத்த முகம் உயிர்களின் தீவினையை அகற்றி நீங்காப் பெருவாழ்வை அளிக்கும்; மூன்றாவது முகம் வேதங்களையும், ஆகமங்களையும் உபதேசிக்கும். நான்காவது முகம் உயிர்களை விடாது பற்றியுள்ள பாசமான இருளை நீக்கித் தாமரை மலர்போல் ஒளியுடன் திகழ்கிறது. ஐந்தாவது முகம் வள்ளி, தெய்வயானை ஆகிய இருவருக்கும் மோகம் அளிக்கும். ஆறாவது முகம் முருகனடியார்கள் வேண்டும் வரங்களை அளித்து, அவர்களை இன்பவெள்ளத்தில் மிதக்கச் செய்யும்.

'' வெவ்வசுரர் போற்றிசைக்கும்
வெஞ் சூரனைத் தடிந்து
தெய்வருயிர் சிந்தும் திருமுகமும்-
எவ்வுயிர்க்கும்

ஊழ்வினைய மாற்றி உலவாத
பேரின்ப
வாழ்வு தரும் செய்யமலர் முகமும்-
சூழ்வே ர்
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள்
யாவும்
முடிக்கும் கமலமுகமும் - விடுத்து
அலாப்
பாச இருள் துரந்து பல்கதிரிற்
சோதி விடும்
வாசமலர் வதன மண்டலமும் -
நேசமுடன்
போகமுறும் பள்ளிக்கும் புத்தேளிர்
பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் -
தாகமுடன்
வந்து அடியீர் சேர்ந்தோர் மகிழ
வரம்பலவும்
தந்து அருளும் தெய்வமுகத்
தாமரையும்

*-(குமரகுருபரர் எழுதிய கந்தர் கலிவெண்பா)*

அருணகிரிநாதரும் இயற்றியுள்ள பாடலொன்றும் இது போன்ற கருத்துக்களை நவில்கின்றன.



**கார்த்திகேயன்-மதுரா அருங்காட்சியகம்**



**தேவியருடன் முருகப் பெருமான்-விராலிமலை**

ஏறுமயில் ஏறி விளையாடும் முகம்
ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம்
ஒன்றே
கூறும் அடியார்கள் வினைதீர்க்கு
முகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம்
ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்த முகம்
ஒன்றே
வள்ளியை மணம் புணர வந்தமுகம
ஒன்றே

**பன்னிரு கரங்கள்:**

குகப் பெருமானின் பன்னிரு திருக்கைகள் புரியும் அருட்செயல்களையும் குமரகுருபரரின் கந்தர் கலிவெண்பா விவரிக்கிறது. முதல்கரம் தேவர்களுக்கு அமுதத்தை அளிக்கும். இரண்டாவது கரம் தெய்வமகளிருக்கு அருளும். மூன்றாவது மாரியைப் பொழியச் செய்யும். நான்காவது கரத்திலுள்ள மாலை மணம் வீசும். மூன்று கரங்கள் மார்பிலும், இடுப்பின் இடது புறத்திலும், தொடை மீதும் சாய்ந்திருக்கும். பிற கரங்களை வீரவளையல்கள், மணி, அங்குசம், கேடயம், ஒளிமிக்க வாள் ஆகிய பொருட்கள் அலங்கரிக்கும்.

ஆரமுதம் தேவர்க்குதவும்
திருக்கரமும் சூர்மகளி
மேவக்குழைந்து அணைந்த
மென்கரமும் ஓவ
மாரி பொழிந்த மலர்க்கரமும்
பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும்
மார்பகத்தி

வைத்த கரதலமும் வாம மருங்கிற்
கரமும்
உய்த்த குறங்கில் ஒருகரமும் -
மொய்த்த
சிறுதொடி சேர் கையுமணி சேர்ந்த
தடங்கையும்
கறுவுசமர் அங்குசஞ்சேர் கையும் -
தெறுபோர்
அதிர்கேடகம் சுழற்றும் அங்கைத்
தலமும்
கதிர்வாள் விதிர்க்கும் கரமும்

*(கந்தர் கலிவெண்பா)*

நக்கீரரின் திருமுருகாற்றுப் படையிலும் முருகப்பெருமானின் பன்னிரு திருக்கரங்களின் செயல்களை வருணிக்கும் பாடல் ஒன்று உள்ளது.

" வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு
நிமிர்ந்தோள்
விண்செலல் மரபின் ஐயர்க்கு
ஏந்தியது
ஒருகை உக்கஞ் சேர்த்தியது ஒருகை
நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின்
மிசை யசை இயது ஒருகை
அங்கு சங்கடாவ ஒருகை இருகை
ஐயிரு வட்டமொடு எஃகு வலந்திரிப்ப
ஒருகை
ம ர்போடு விளங்க ஒரு கை
தாரொடு பொலிய ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக்
கொட்ப ஒரு கை
பாடின் படுமணி இரட்ட ஒருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய
ஒரு கை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட
ஊங்கப் பன்னிரு கையும் பாற்பட
இயற்றி "

முதற்கை துறவிகளுக்கு அருள்புரியும். மூன்று கரங்கள் இடை, தொடை, மார்பு ஆகியவற்றின் மீது வைக்கப்பட்டிருக்கும். மற்றொன்று மார்பில் புரளும் மாலையைப் பற்றியிருக்கும். அங்குசம், பரிகை, வேல் ஆகிய ஆயுதங்கள் மூன்று கரங்களை அலங்கரிக்கும். ஒன்றில் தொடி என்ற அணிகலன் சுழலும். மற்றொன்று மழையைத் தருவிக்கும் பதினொன்றாவது கரம் மணியை ஒலிக்கும். இறுதியான கரம் தேவமகளிர்க்கு மணமாலை அணிவிக்கும்.

**தமிழின் வடிவம் :**

முருகப்பெருமான் தமிழின் மொத்த வடிவாகவே விளங்குவதால் அவனைத் தமிழ்க்கடவுள் என்று கூறுதல் சாலவும் பொருந்தும். "புலவர் புராணம்" என்ற நூலிலுள்ள ஒரு பாடல் இக்கருத்தை வலியுறுத்துகிறது.

" கண்நிகர் மெய்யும் சென்னிக்கணம்
உறழ் இனத்தின் கூறும்
திண்ணிய புயங்களே போல்
திகழ்தரும் உயிரும் வேறொன்று
என்னிடற்கரியவாகும் எஃகும்
இமலிற்காட்டும்
புண்ணிய முருகன் செய்ய சொறபதம்
போற்றி வாழ்வாம் "

தமிழிலுள்ள மெய்யெழுத்துக்கள் முருகனின் கண்களாகவும், வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற இன எழுத்துக்கள் ஆறும் அவனது திருமுகங்களாகவும், பன்னிரண்டு உயிர் எழுத்துக்கள் தோள்களாகவும் விளங்குகின்றன. தமிழுக்கு உரிய தனி எழுத்தான ஆய்தம் தன்னிகரற்ற வேலாயுதமாக விளங்கும். இவ்வாறு முருகன் தமிழ்த் தெய்வமாகவே திகழ்கிறான்.

**அழகு மிக்கவன் :**

தமிழ்மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே வாழ்ந்து



குமரப்பெருமான் ஆலயம்-இலஞ்சி

வந்தனர். இறைவனை இயற்கையில் கண்ட மக்கள் முருகு என்ற சொல்லை அழகு என்ற பொருளை யுணர்த்த உபயோகித்தனர். முருகு என்ற சொல்லிலிருந்து முருகன் என்ற பெயர் தோன்றியது. சங்க இலக்கியங்கள் பலவற்றிலும் மூவருலா, திருப்புகழ் போன்ற பிற்கால இலக்கியங்களிலும் முருகனின் இளமையும், அழகும் போற்றப்பட்டுள்ளன.

'' மறிபரசு கரம் இலகு பரமன் உமை
இருவிழியும்
மகிழ மடிமிசை வளரும்...
இளையோனே ''

(நக்கீரரின் திருமுருகாற்றுப்படை)

**கதிரவனுடன் ஒப்புமை:**

முருகன் ஒளிமிகுந்தவனாகச் சுடர் விட்டுப் பிரகாசிப்பதால் அவனைக் கதிரவனுடன் பல இலக்கியங்கள் ஒப்புமைப்படுத்தியுள்ளன. நூறு ஆயிரங்கோடி இளஞாயிறுகள் ஒன்று சேர்ந்தால் உண்டாகும் ஒளியை முருகப் பெருமான் பெற்றிருப்பதாகக் கந்தர் கலிவெண்பா நவில்கிறது. இளஞாயிற்றின் செவ்விய நிறவழகைக்கொண்டு, தாமரை மலரிடையே முருகன் பிறந்ததாகப் பரிபாடலில் கடுவன் இளவெயினனார் இயற்றிய பாடல் செப்புகிறது.

'' ஞாயிற்றோர் நிலத்தகை நளினத்துப்
பிறவியை ''

இதே கருத்தை,

'' முகனும் விரிகதிர் முற்று விரிசுடர்
ஒத்தி ''

என்று பரிபாடல் கூறுகின்றது.

ஆயிரங்கோடி மன்மதர்களின் அழகு ஒன்று திரண்டாலும் வேலவனின் அழகுக்கு இணையாகாது. இதனால் முருகன் அழகிற்கு உவமை கூறுவது இயலாது. எத்தனை ஊழிக் காலம் தொடர்ந்து கண்டாலும் முருகனின் திருவுருவ எழிலை முழுமையாகக் காண இயலாது. அவ்வழகை மனத்தாலும் நினைக்க முடியாது. இவ்வாறு முருகனைக் கண்டவுடன் மனம் தடுமாறிய சூரபத்மன் உரைத்ததாகக் கச்சியப்ப சிவாச்சாரியாரின் கந்தபுராணம் இயம்புகிறது.

'' ஆயிரகோடி காமர் அழகெலாம்
திரண்டொன்றாகி
மேயின எனினும் செவ்வேள்
விமலமாம் சரணந்தன்னில்
தூயநல் எழிலுக்காற்றாது என்றிடில்
இனைய தொல்லோன்
மாயிறு வடிவிற்கெல்லாம்
உவமையார் வகுக்க வல்லார்!'

அருணகிரிநாதர் முருகனின் எழிலையும், வனப்பையும் கண்டுகளிக்க நான்காயிரம் கண்களை நான்முகன் அளிக்கவில்லையே என்று ஏங்குவதாகக் கந்தரலங்காரத்தில் ஒரு பாடல் அமைந்துள்ளது.

'' சேலார் வயற் பொழிற்
செங்கோடனைச்
சென்று கண்டு தொழ
நாலாயிரங்கண் படைத்திலனே
அந்த நான்முகனே ''

பத்துப்பாட்டு நூலான மதுரைக் காஞ்சியில் கலைதேர்ந்த சிற்பியின் கைவண்ணத்தில் பாவை அழகு பெறுவதைக் குறிப்பிடும்போது முருகனின் எழில்நினைவு கோரப்படுகிறது.

'' வல்லோன் தைஇய வரிப்புனை
பாவை
முருகு இயன்றன்ன உருவினையாகி ''

(மாங்குடி மருதனார் இயற்றிய
மதுரைக் காஞ்சி)

சிலப்பதிகாரத்திலும் கோவலனின் பேரழகைப் போற்றுமிடத்தில் அவன் முருகனுடன் ஒப்பிடப்பட்டுள்ளான்.

'' மதிமுகமடவார்தம் .........
பண்தேய்த்த ஊழியினார்
ஆயத்துப் பாராட்டிக்
கண்டு ஏத்துஞ் செவ்வேள் என்று
இசை போக்கிக் காதலாற் கொண்டு
ஏத்துங்கிழமையான் ''

ஒட்டக்கூத்தர் இயற்றிய மூவருலாவில் வீதியுலா வரும் போது விக்கிரம சோழன், குலோத்துங்கன் ஆகிய அரசர்களின் அழகைக் கண்ட பொதுமகளிர் அவ்வரசர்களை முருகனுடன் ஒப்பிடுகின்றனர்.

'' விலையில் அமுதம் மதனவிமலை
முலையின் முழுகு முருகன் ''

(குலோத்துங்க சோழனுலா)

திருப்புகழிலுள்ள ஒரு பாடல் முருகன் தளிர்நடையுடன், அனைவரின் உள்ளங்களையும் கொள்ளை கொள்ளுமாறு வந்த காட்சியை வருணிக்கிறது.

குன்றிடிய அப்பொனின் திருவரைக்
கிண் கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டாம் அசைந்து இளங்குழைகளிற்
ப்ரபை வீச
தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கை கொஞ்சிட மணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத்
திருவான
சங்கரி மனங்குழைந்து உருகமுத்
தந்தர வருஞ் செழுந்தளர்
நடைச் சந்ததி ''

**ஞானத்தின் வடிவம்**

முருகன் ஞான உருவாக விளங்குகிறான். இச்சை, ஞானம், கிரியை ஆகியன அவனது திருக்கண்கள். கேவலம், சகலம், சுத்தம் ஆகிய மூன்று அவத்தை நிலைகளை நீக்கி முத்தியை அளிக்கவல்ல பெரியோன் அவன். முருகனின் திருவடிகள் அகப்பற்று, புறப்பற்று ஆகியன அற்ற இடமாகத் திகழ்கின்றன. அவன் முன்னிலையில் அனைத்து உயிர்களும் எவ்வித வேறுபாடும் இன்றிச் சமமாக விளங்கும். உள்ளன்புடன் துதிக்கும் அடியார்களின் இதயக் கமலத்தில் வீற்றிருக்கும் தெய்வீக விளக்கொளியாகவே அவன் திகழ்கிறான். அகரம், உகரம், மகரம், நாதம, விந்து ஆகிய ஐந்து வகையான ஓங்காரத்து உள்ளொளிக்கும் உள்ளொளியாய், ஐந்து தொழில்களை நடத்தி முடிக்கும் பேருருவாக விளங்குவான். பலகோடி அண்டங்

கள் அவனது உருவாகத் திகழ்கின்றன. அண்ட சராசரங்கள் அவனது உடல் உறுப்புக்களாகும். இச்சை, ஞானம், கிரியை ஆகிய மூன்றும் அகக் கருவிகள். ஞானத்தில் முழு முதல் வடிவாக முருகன் விளங்குகிறான்.

**ஆகம நூல்களில் பல்வகை வடிவங்கள் :**

ஆகம நூல்களிலும், புராணங்களிலும் முருகனின் பல்வேறு உருவங்கள் பற்றிய விரிவான விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. குமார தந்திரம் என்ற நூலில் முருகப்பெருமானின் பதினாறு திருவடிவங்கள் விளக்கப்பட்டுள்ளன. அவையாவன : சக்திதரன், கந்தன், சேனாதிபதி, சுப்பிரமணியன், கஜவாகனன், சரவணபவன், பிரமசாஸ்தா, வள்ளி கலியாண மூர்த்தி, பாலசுவாமி, சிரவுஞ்ச பேதன், சிகிவாகனன், கார்த்திகேயன் குமரன், சண்முகன், தாரகாரி, சேனானி. ஒவ்வொரு திருவுருவத்தின் உடலமைப்பு, உடையமைப்பு, தாங்கியுள்ள ஆயுதங்கள் ஆகிய அனைத்து விவரங்களும் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ தத்வ நிதி என்ற நூலில் மேலும் ஆறு வடிவங்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவையானவை-அக்னிஜத சுப்பிரமணியன், சௌரபேய சுப்பிரமணியன், காங்கேய சுப்பிரமணியன், குகசுப்பிரமணியன், பிரம்மச்சாரி சுப்பிரமணியன், தேசிக சுப்பிரமணியன். வடமொழியில் விளக்கப்பட்டுள்ள 16 வகைத் திருவுருவங்கள் பற்றிய விவரங்களைக் கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்தில் கவின்மிகு தமிழில் அளித்துள்ளார்.

" ஆட்டும் சமயம் ஆறினுக்கும்
ஆதாரங்கள் ஆறினுக்கும்
அத்துவா ஓர் ஆறினுக்கும் அமையும்
தானே முதல் என்று
தீட்டும்படியா வரும் தெளியத்
தெளிந்தாங் காறுமுகம் திகழ்
செல்வம் மலியும் இடைக்கழிவாழ்
சேயைப் பரிந்து காக்கவே "

(மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அருளிய திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ்)

★

---

(22-ம் பக்கத் தொடர்ச்சி)

போலவே நாமும் கண்ட கண்ட பாடல்களைப் படித்தும் பாடியும் செரிக்க முடியாமல் தவிக்கிறோம். அந்தப் பாடல்களை உமிழவும் வழி தெரியாமலிருக்கிறது. உலக வாழ்க்கைக்காக அவற்றை விடாது கெட்டியாகப்பிடித்துக்கொண்டிருக்கிறோம். அவை செரித்தாலாவது பரவாயில்லை. அவை செரிக்காமல் பெருந்தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருக்கின்றன. என்னசெய்வதென்று புரியவில்லை. நாம் கேட்காமலே, நம்மைக் காப்பாற்ற ஓடிவரும் நம் அன்னையான ஆண்டாள், நம் நிலைமையைப் புரிந்து கொண்டு, திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் நமக்குச் சொல்லி வைக்கிறாள். நாமும் அவற்றைப்பாடமண்ணாகிய மற்றைய பாடல்கள் இந்த வெண்ணெயால் செரிக்கப்பட்டு நாமும் சுகம் பெறுகிறோம்.

ஸீதைக்கு மாங்கல்யதாரணம் முடிந்தபின் அச்மாரோஹணம்என்னும் அம்மி மிதித்தல் விமரிசையாக நடந்தேறியது.

ஆண்டாளுக்குநடந்த விமரிசையை அவளே கூறுகிறாள்.

" இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
பற்றாவான்
நம்மையுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்
பற்றி
அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன்
தோழீ! நான்! "

" இப்பிறவிக்கும், இனிமேலே இருக்கின்ற பிறவிகள் எல்லாவற்றுக்கும் சரண்யனாகவிருப்பவனாய், நமக்கு சேஷியாய், ஸகல கல்யாண குண பரிபூர்ணனாய் நாராயணனாகிய கண்ணன் தன் கையால் என் காலைப் பற்றி அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன்."

ஆச்ரிதர் காலைப் பிடிக்கத்தயங்கமாட்டான் என்பது எவ்வளவு உண்மை!

ஸீதை பூமியிலிருந்து அவதரித்தாள்; ஆண்டாளும பூமியிலிருந்து அவதரித்தாள்; ஸீதைக்கு ஆசாரிய ஸ்தானத்தில் அனுமன்; ஆண்டாளுக்கு ஆசாரிய ஸ்தானத்தில் பெரியாழ்வார்.

கோல் தேடியோடும் கொடியைப் போன்றே, மால் தேடியோடும் மனம் என்று இந்த இரு கொடிகளுமே மாலைச் சுற்றிப் படர்ந்தன.

பவித்ராணாம் பவித்ரம் ச
மங்களாநாம் ச மங்களம் |
தைவதம் தேவதாநாம் ச
பூதாநாம்யோSவ்யய: பிதா ||

யார் பவித்ரமான பொருள்களுக்கும் பவித்திரத்தை உண்டாக்குகிறாரோ, மங்கள வஸ்துக்களுக்கு மங்களத்தை உண்டாக்குகிறாரோ, தேவதைகளுக்கெல்லாம் தேவதையானவனோ, எல்லாப் பிராணிகளுக்கும் அழியாத பிதாவோ அத்தகைய பரமாத்மாவின் திருநாமங்களையே ஸ்மரித்துக் கொண்டிருந்தனர். தாங்கள் மட்டுமில்லாது மற்றவர்களையும் கரையேற்றத் துடித்தார்கள். பகவதனுபவத்திற்குத் தனியாகச் செல்லக் கூடாதென்பர். பெரியோர் " சங்கமிருப்பார் போலே " என்றும், " குழாங்கள் ", " ஆயர் சிறுமியர் " என்றும் கூட்டங்கூட்டமாகச் சென்றார்கள்.

எம்பெருமானைத் திருமணம் செய்து கொண்டபின், ஆண்டாள் தன் ஸம்பந்தம் பெற்றிருந்த எல்லோருக்கும் பறை என்கிற கைங்கர்ய செல்வத்தைத் தந்தருளினாள்.

✿

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

யுமான இவள் எப்போதும் உன்னை நிழலைப் போலத் தொடர்ந்தே இருப்பாள்'' என்றபடி.

இங்கு நிழலை உபமானமாகக் கொடுத்தது மிகவும் அர்த்தகர்ப்ப மானது. மனிதனின் நிழல் காலையில் அவன் பின் நீண்டும், நடுப் பகலில் அவனுடன் ஒன்றியும், மாலையில் அவனுக்கு முன்பாக நீண்டு வளர்ந்தும் செல்லுகிறது. அவனை விட்டு அகல்வதில்லை என்பது மட்டுமல்ல. அதுபோல பதிவ்ரதையானவள் பதியைவிட்டு அகலாதது மட்டுமின்றி, மண வாழ்க்கையின் காலையில் கணவன் பின் நின்று தனது கடமைகளை ஆற்றுவாள்; மண வாழ்க்கையின் மத்தியில் அவள் கணவனுக்குச் சமமான நிலையையடைந்து அவனுடன் முற்றும் ஒன்றி விடுவாள். அவளுடைய ஸம்மதமின்றி கணவன் எதையும் செய்ய மாட்டான்; மண வாழ்க்கையின் மாலை செல்லச் செல்ல மனைவியே முன்னின்று மேலும் மேலும் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டு பதிக்கு ஒய்வு கொடுப்பாள். இந்த அழகான ஆழ்ந்த கருத்து இந்த உபமானத்தில் பொருந்தியுள்ளது.

**வெய்யிலும் நிழலும்:**

வெய்யிலும் நிழலும் எம்பெருமான் இட்ட வழக்காக இருப்பதைக் கொண்டு அவனையே வெய்யில் நிழல் என்றெல்லாம் ஆழ்வார்கள் பாடுவதுண்டு. அதற்கு ஓரிரண்டு உதாஹரணங்கள்.

நிழல் வெய்யில் சிறுமை பெருமை
குறுமை நெடுமையுமாய்
சுழல்வன நிற்பன மற்றுமாய் அவை
யல்லனுமாய்
மழலை வாய்வண்டு வாழ்திருவிண்
ணகர்மன்னுபிரான்
கழல்களன்றி மற்றோர்களை கணிலம்
காண்மின்களே.

(திருவாய் மொழி 6-3-10)



சோழர் காலத்து விஷ்ணு கோயில்-ஸ்ரீகாகுளம் (கிருஷ்ணா மாவட்டம்)

தாப சாந்தியைத் தருமதான நிழலும் தாபகரமான வெய்யிலும், சிறுமைக்கு எல்லையான அணுத்வமும் பெருமைக்கு எல்லையான மஹத்வமும், மத்ய பரிமாணங்களிலுண்டான ஹ்ரஸ்வ தீர்க்கங்களும், ஜங்கமஸ்தாவரங்களான மற்றுமுள்ள பதார்த்தங்களுமாய், இப்படி ஸர்வ சரீரியாக நிற்கச் செய்தே அவற்றினுடைய ஸ்வபாவத்தை உடையனல்லாதவனுமாய்க் கொண்டு, வண்டுகள் தென்னாதெனாவென்று முரலப் பெற்ற திருவிண்ணகரில் உறைகின்ற பெருமானது திருவடிகளையொழிய வேறொரு சரணமுடையோமல்லோம் நாம். இதை ஸத்யமென்று கொள்ளுங்கள் என்றபடி.

அதுபோலவே,

கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும்
தேற்றமுமாய்
தண்டமும் தண்மையும் தழலும்
நிழலுமாய்
கண்டு கோடற்கரிய பெருமான்
எனனை ஆள்வானூர்
தெண்டிரைப் புனல்சூழ் திருவிண்ண
கர் நன்னகரே.

(திருவாய்மொழி 6-3-2)

ஐங்கருவி கண்ட வின்பம் (திருவாய்மொழி 4-9-10) என்கிறபடியே செவி, வாய், கண், மூக்கு, உடல் என்ற ஐந்து உருப்புக்களாலும் அநுபவிக்கப்படுகிற இன்பமும் அதற்கு எதிர் தட்டான துன்பமும் தானேயாயிருக்கை. அதாவது விஷய ஸங்கங்களையே சிலர் இன்பமாக நினைக்கும்படியும், அவற்றையே விரக்தர்கள் துன்பமாக நினைக்கும்படியும் செய்பவன் எம்பெருமான் என்றபடி. அவ்விதமே மிகப்படித்தும் சிலர் தெளிவின்றிக் கலங்கியே கிடக்க, ஒன்றுமறியாத சிலர் ஆசார்ய கடாக்ஷத்தாலே தெளிந்திருப்பர். இதற்கும் அவனே காரணம். நிக்ரஹமும் அநுக்ரஹமும், தழலும் நிழலும் (சீதோஷ்ணங்களும்) அவனிட்ட வழக்கு. இப்படி ஒருவரால் அளவிட்டறிய முடியாத ஐச்வர்யத்தையுடையனாய் என்னை அடிமை கொள்பவனான ஸர்வேச்வரனுடைய திவ்ய தேசம் எதுவென்றால் தெளித்து அலையெறிகின்ற தீர்த்தம் சூழ்ந்த திருவிண்ணகர் என்ற அழகிய நகராகும் என்றபடி.

தொடர் கவிதை

# திருவேங்கட நூற்றந்தாதி

## நேரிசை வெண்பா

கடிவெளிர் வண்ணமாய் கார்வண்ணன் கையின்
பிடியிற் பொலியும் பணிலம் - மடிக்கின்ற
மாசுகளின் மாயத்தின் மாமைகள் ஆயிரம்
பாசமாகும் பெம்மானைப் பேசு

பேசுதற்கும் அச்சுறுத்தும் பற்றலரின் மீதேறி
நாசமாக்கித் தானொலித்து நின்றிடும் - தேசுடைய
தண்மா மதிவெண் தளிர்கதிர் போலொளிரும்
கண்ணன்கை நாத குடம்

குடத்தொடு கன்றுகளைக் கூட்டியகோ பாலன்
விடமத்தால் வஞ்சம் விளைத்தார்—படுகளத்தின்
உள்ளில் ஒலித்தான்தன் ஒண்சங்கம் உன்மத்தர்
உள்ளம் கலங்கினார் ஓய்ந்து.

ஓயா தொளிர்கின்ற தோர்பொன் மலைபோலும்
தூயோனநின் கையிரும் தண்டமெமை - வேயவரும்
பாவக் கனையிருள் பாய்ந்தே வெருட்டிடும்
தேவாதி தேவா சரண்.

சரணடைந்தார்க் கில்லையென்றுஞ் சாய்வுகள் நின்னை
முரண்பட்ட மாற்றலன் முற்றை - தரணியினை
தான்சென் றடைக்கநின் தண்டகத்தால் வீழ்த்தினைநீ
தானெனக்கு நீங்காத் துணை.

துணையாகித் துன்பம் தணிக்கும்தீர் வாகி
கணத்தார் வெருட்டுபடைக் கேகி - பிணைந்தார்க்குப்
பேழளிக்கும் பெம்மானின் பக்கம் கலனாகி
வாழ்வளிக்கும் நாந்தக வாள்.

வாள்போலும் வஞ்சனையை வாட்டமுற வேவீழ்த்தி
நாள்தோறும் நன்மைகளைத் தான்நல்கி - ஆள்கின்ற
சீதரன் கையணைக்கும் சார்ங்கமிருக் கச்சேதம்
ஏதும் எதிர்வருமா என்?

என்னனெந்தை ஏமாப்பை ஏமத்தைப் பெய்திடுவான்
தன்னகத்தை தனைால் திருமகளைத் - தென்னிலங்கைச்
சேர்த்தடைத்தான் சீறிடும் சாரங்க வாளியினால்
சீர்குலைந்தான் மேனி சரிந்து.

சரிகின்ற நெஞ்சத்தைத் தாங்கும்சுமை தாங்கி
அரியென்னும் ஆரா வமுது - விரிகின்ற
வெந்தழலும் தென்றலினை வீசவரும் வேங்கடச்
செங்கனிதன் நோக்கின் சிறப்பு.

சிறப்பாளன் வாழ்வினிற் சேரும்சுவைக் கெல்லாம்
பொறுப்பாளன் தீமைஒறுப் பாளன் - அறங்கள்
அனைத்தும் துளிர்க்கும் அடிப்படை யாளன்
நினைத்தால் நயப்பானே நெஞ்சு.

நெஞ்சமெல்லாம் நஞ்சிருக்கும் நாமட்டும் கொஞ்சிநிற்கும்
வஞ்சனைக்கோ எல்லையில்லா வான்மதிப்பு - பஞ்சமதில்
ஊறிவரும் பாம்பணைசேர் உத்தமா எம்தமக்கோர்
ஆறுதலை தருதற் கடை.

அடையாய் மனம்பற்றி ஆசை பிடித்து
விடையிலாது கொள்வார் வருத்தம் - இடையெதிலும்
நீசெல்வம் என்றுணரார் நாதனே வேங்கடவா
காசுக்கே எண்ணும் குழு.

குழுமிக் கலந்து குழிபறிப்பார் செய்யும்
பழிகள் பணியாய் புகல்வார் - விழிகண்முன்
நற்செயல்கள் காணின் நலிவுசெய்வார் வேங்கட
வெற்பிடையோய் நீதான் விடிவு.

விடிகதிரை மேல்திக்கின் விண்ணடியிற் காண
துடிக்கும்தெளி வில்லா தரணி - அடிகள்
மலர்நினைதைக் கண்டபின் மற்றோர் குழப்பம்
கலக்குமா வாழ்வினைக் கூறு?

கூறிடும் குற்றங்கள் கோர்வையாய் சேர்ந்திட
ஊறிடும் வாழ்வில் உயிரில்லை - தூறிடும்
தேன்மலைத் தெய்வமே தீயும்நின்னால் யாவுமெனில்
ஏன்தா மதமோ எழு?

எழுகின்ற நேரம் எதிர்வந் தழுத்தும்
பழவினையின்பாழ் பயன்கள் - விழுகின்ற
அத்தருணம் வேங்கடவா அன்றிநினனை காத்திட
எத்திறமும் நில்லா தெதிர்.

எதிர்மறையே எண்ணிடும் எண்ணம் எதிலும்
அதிகமாகி சாய்க்கும் அமைதி - மதியை
வழிநடத்தும் தேவா முறையாக யாங்கள்
செழிப்ப துனது செயல்.

திரு. வி. ஆர். ஸ்ரீநிவாஸ இராகவன், M.SC.,
சென்னை-44.

(தொடரும்)

எம்பெருமானின் திருவடி நிழல் :

காதம் பலவும் திரிந்துழன்றேற்கு
அங்கோர் நிழலில்லை நீரில்லை, உன்
பாத நிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம்
நானெங்கும் காண்கின்றிலேன்

என்றருளினார் பெரியாழ்வார். பல காத தூரம் திரிந்தலைந்தும் நான் அவ்விடங்களில் ஒதுங்குவதற்கு ஒரு நிழலும் காணவில்லை, தாபமாற்றக் கடவதான தண்ணீரையும் காண வில்லை. ஆராய்ந்து பார்த்ததில் உனது திருவடி நிழலொழிய மற்றொரு ஆச்வாஸ ஹேதுவான இடத்தை நான் எங்கும் காண வில்லை. உலகத்தார் ஒதுங்குகிற நிழலும் அவர்கள் பருகும் நீரும் அடியேனுக்கு விஷ வ்ருக்ஷத்தின் நிழலாகவும் நச்சு நீராகவும் தோற்றுகின்றன என்றபடி.

தன் சரண் நிழல்கீழ் உலகம்
வைத்தும் வையாதும்

(திருவாய்மொழி 6-3-8) என்றருளினார் நம்மாழ்வார். தன் திருவடிகளிலே வந்து சேர்பவர்க்கு ஸகல தாபங்களும் தீரும்படி நிழல் கொடுத்தும், அக்னி ஜ்வாலையை விழுங்கி விடாய் கெட நினைப்பது போலவும், ஆடுகின்ற பாம்பின் நிழலில் ஒதுங்கி ஸுகிக்க நினைப்பது போலும் மற்ற விஷயங்களின் நிழலிலே ஒதுங்கி மகிழ நினைப்பார்க்குத் தாபத்தை வளர்த்தும் தன்மையுடையவன் எம்பெருமான் என்றபடி.

ஆகவே, அந்த எம்பெருமானின் திருவடி நிழலே சரண் என்று தீர்மானித்தார் நம்மாழ்வார்.

இலங்கதி மற்றொன்று எம்மைக்கும்
ஈன் தண்டுழாயின்
அலங்கலங்கண்ணி ஆயிரம் பேருடை
யம்மான்
நலங்கொள் மறை வாணர்கள் வாழ்
திருமோகூர்
நலங்கழல வனடி நிழல் தடமன்றி
யாமே.

(திருவாய்மொழி 10-1-2)

பரம போக்யமான திருத்துழாய் மாலையையுடையனாய், ஆயிரந்திரு நாமங்களையுடைய ஸ்வாமியாய், விலக்ஷணமான வைதிகர்கள் வாழுமிடமான திருமோகூரிலே திருவடிகள் பொருந்தியிருக்கப் பெற்றவனான எம்பெருமானுடைய திருவடி நிழலாகிற பொய்கை தவிர வேறொரு கதியை யாம் ஒரு பிறப்பிலும் உடையோமல்லோம் என்றபடி.

"நலங்கழலவன்" என்று ஒரு திருநாமமே சாத்துகிறார் ஆழ்வார் எம்பெருமானுக்கு. திருவடிகளுக்கு நலன் அல்லது நன்மையாவது யாது எனில், குணமுடையவரைக் கைக்கொள்வது, தோஷம் நிரம்பியவரைக் கைவிடுவது என்றொரு விரதம் கொள்ளாமல், अनालोचित विशेषाशेष-लोकशरण्य என்று எம்பெருமானார் கத்யத்தில் அருளிச் செய்தபடியே "இத்திருவடிக்கு ஆகாதாரில்லை" என்னும்படி அனைவரையும் கைக்கொள்ளுதல். "ஆச்ரிதருடைய குண தோஷ நிரூபணம் பண்ணாத திருவடிகள்" என்று இவ்விடத்தில் ஈட்டு வ்யாக்யானம்.

நிழலும் அடிதாறும் :

அழகு மறிவோமாய் வல்லினையும்
தீர்ப்பான்
நிழலும் அடிதாறுமானோம்–கழலக்
குடங்கள் தலைமீ தெடுத்துக் கொண்
டாடி, அன்றுஅத்
தடங்கடலை மேயார் தமக்கு.

என்பது பெரிய திருவந்தாதியில் நம்மாழ்வாரின் அருளிச்செயல்.

வலிய பாபங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக அழகிய உபாயத்தை அறிந்தோமாய், குடங்களைத் தலையின் மேலே எடுத்து வைத்துக் கொண்டு ஆகாசத்திலே சுழன்று வரும்படி கூத்தாடி முற்காலத்திலே அக்குடக்கூத்தாடின விடாய் தீர்வதற்காகத்தான் முன்பு விட்டு வந்த அப்பெரிய திருப்பாற்கடலிலேயே போய்ச் சேர்ந்த பெருமானுக்குப் பாத நிழலாகவும் பாத ரேகையாகவும் உடன்பட்டோமானோம். வல்வினைத் தீர்ப்பதற்கு யாம் அறிந்த உபாயம் இதுவே என்றபடி.

நிழலின் அருமை அருமையான விஷயம். விரிவுக்கஞ்சி பல விஷயங்கள் விடப்பட்டுள்ளன.

✱



# உபநிஷத்தின் ஸாரம்

வேதங்கள் ஒரு காலத்தில் உண்டாக்கப்படுவன, ஒரு காலத்தில் அழிவது என்பது கிடையாது. வேதங்கள் எல்லா காலத்திலும் நித்யமாக உள்ளன என்று பெரியோர்கள் கூறுகின்றனர். மஹா ப்ரளயத்தில், சேதநங்களான அறிவுடைய பொருள்களும், அசேதநங்களான அறிவில்லாப் பொருள்களின் கூட்டமான இவை அனைத்தும் அருவமாக மாறி இறைவனிடத்தில் மறைந்து, இறைவனைத் தவிர வேறு ஒரு பொருளும் இல்லையாம்படி அவனில் மறைந்து இருக்கும். இதற்கு மஹா ப்ரளயம் என்று பெயர். பின்பு படைப்புக் காலம் வந்த போது இறைவன் தன் நினைவால் சேதநா, அசேதநங்களைத் தன்னில் வேறுபட்டு வரும்படியாக்கி, முன் கல்பத்தின் வினைப்படி படைத்தல் நிகழ்வதாக வேதம் கூறுகிறது.

இதேப் போல் வேதங்களையும் ப்ரளய காலத்தில் இறைவன் தன் நினைவில் கொண்டிருந்து, படைப்புக் காலத்தில் நான்முகனைத் தோற்றுவித்து, அவனுக்கு ஓதுவித்து படைக்கும்படி செய்கிறான் என்பர். ஆதலால் தான் நிற்கும் நான்மறை, பண்டை நான்மறை என்று நித்யமாக இருப்பதாகச் சொல்லுவார்கள்.

இந்த வேதத்தை பூர்வ பாகம் (முன் பகுதி) என்றும், உத்தர பாகம் (பிற்பகுதி) என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கின்றனர். பூர்வ பாகத்தை கர்ம பாகம் என்றும், உத்தர பாகத்தை ப்ரஹ்ம பாகம் என்றும் வடநூலார் கூறுகின்றனர்.

பூர்வ பாகத்தை (முன் பகுதியை) வேதம் என்றும், உத்தர பாகத்தை (பின் பகுதியை) வேதாந்தம் என்றும், உபநிஷத்துக்கள் என்றும் கூறுவார்கள்.

இந்த உபநிஷத்துகளாவன: நாராயணோபநிஷத்து, ஸுபாலோபநிஷத்து, ப்ரஹ்மபிந்தூபநிஷத்து, ந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத்து, மஹோபநிஷத்து, கோபாலதாபிந்யுபநிஷத், ஈசாவாஸ்ய உபநிஷத்து, கேநோபநிஷத்து, கடோபநிஷத்து, ப்ரச்நோபநிஷத்து, முண்டகோபநிஷத்து, மாண்டுக்யோபநிஷத்து, தைத்திரீயோபநிஷத்து, சாந்தோக்யோபநிஷத்து, ப்ருஹதாரண்யகோபநிஷத்து, மந்த்ரிகோபநிஷத்து என்று அநேக உபநிஷத்துக்கள் உள்ளன.

பூர்வ பாகமான வேதத்தில் ஆராதனைகளை வடித்துச் சொல்வதால் இதை கர்ம பாகம் என்றும், உத்தர பாகமான உபநிஷத்தில் ஆராதிக்கப்படும் ப்ரஹ்மத்தின் தன்மைகளைச் சொல்வதால் ப்ரஹ்ம பாகம் என்றும் சொல்லுவார்கள். கர்ம பாகத்திலும், ப்ரஹ்ம பாகத்திலும் மேலெழத் தோற்றும் முரண்பாடுகளை ஆராய்ந்து, முரண்பாடுகளை நீக்கியதை முறையே கர்ம மீமாம்சை என்றும் ப்ரஹ்ம மீமாம்சை என்றும் சொல்லுவார்கள்.

உத்தர பாகத்தின் விசார நூலான ப்ரஹ்ம மீமாம்சையை ப்ரஹ்ம ஸூத்திரங்கள் என்றும், வேதாந்த ஸூத்திரங்கள் என்றும், ஸாரீக சாஸ்திரம் என்றும் சொல்லுவார்கள்.

இதை வேதவ்யாஸர் நான்கு அத்தியாயங்களாகவும் பதினாறு பாதங்களாகவும், நூற்று ஐம்பத்தாறு அதிகரணங்களாகவும், ஐநூற்று நாற்பத்தைந்து ஸூத்திரங்களாகவும் அமைத்துள்ளார்.

திரு. ஜி. இலட்சுமணன், எம.ஏ.,
சேடப்பாளையம்.

இந்த ப்ரஹ்ம ஸூத்திரத்திற்கு தத்துவம் ஒன்றுதான் என்ற கொள்கை உடையவர் சங்கரர். தத்துவங்கள் இரண்டு என்ற கொள்கை உடையவர் மத்வர். தத்துவங்கள் மூன்று என்ற கொள்கை உடையவர் ராமாநுஜர். இப்படி இதற்கு மூவரும் மூன்று உரைகளை தம் தம் கொள்கைகளுக்கு ஏற்ப பொருந்தும்படி அமைத்துள்ளனர்.

உபநிஷத் வாக்யங்கள்: "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம"; "புருஷ ஏவேதம் ஸர்வம்"; 'இன்ன விதங்களாக, பார்க்கின்றவைகள் அனைத்தும் ப்ரஹ்மமே அல்லவா' என்றும், இவை அனைத்தும் புருஷனே என்று சொன்னதை, ப்ரஹ்மம் என்ற ஒன்றுதான உள்ளது, இவை தவிர்ந்தவை எல்லாம் பொய்த் தோற்றமே என்று தத்வம் ஒன்று என்கிறார் சங்கரர்.

(A) 'போக்தா போக்யம் ப்ரேரிதாரம்ச மத்வா' என்றும் (B) 'ஜ்ஞாஜ்ஞௌ த்வா வஜாவீஸநீஸௌ' என்றும் (C) 'ஸதா பஸ்யந்தி ஸூரய:' என்ற மூன்று உபநிஷத்துக்களின் பொருளாவது.

(A) புண்ய பாப கருமங்களைச் செய்து இவற்றின் பயன்களை நுகரும் போக்தா என்ற ஜீவனும், இந்த ஜீவன் கர்மங்களைச் செய்வதற்கும், பயன்களை நுகர்வதற்கும் துணையாயிருக்கிற ஜடப் பொருளும் இவ்விரண்டையும் உடையவனாய் உள்ளும் புறமும் உயிரும், ஆதாரமுமாய் வ்யாபித்து நிலை பெறச் செய்து ஏவுபவனாய் ப்ரேரித்துக் கொண்டிருக்கிற இறைவன் என்ற மூன்று உண்மைப் பொருள் என்றும்.

# திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய்

பெறுகின்ற சிறப்பினால் பேரின்பம் நல்கிநாளும்
மறுப்பில்லா உயர்வினால் மங்களம நிறைந்து
செறுக்கில்லா சிந்தையினை சேகரித்து வாழ்ந்திடவே
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே!

ஊருக்கு ஊர்சென்று ஓடித்திரிந்து செல்வத்தால்
பேருக்கு வாழ்வதெலாம் பேதமை எனக்கண்டு
நேருக்கு நேர்சென்று நிகரிலா அமைதிகூட
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

யாருக்கு சேர்த்துவைத்து யாருக்காக உண்டுகண்டு
வேருக்கு நீர்போல வேண்டினோர்க்கு ஆகிநொந்து
தேருக்கு போகும்போது தெரிந்துவர யாருமில்லையென
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

பாருக்குள் சிறப்புவேண்டும் பட்டம்பதவி வேண்டும்
நீருக்குள் பாசிபோல நீண்டிடும் துன்பக்கொடி
காருக்குள் போகும்போது கண்மறைந்த விந்தையென
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

சாருக்கு ஓர்பிறவியென சந்ததியாயிட்ட மன்னிதனில்
ஏருக்கு கலப்பையாகி இதயத்தை உழுதுவிட்டால்
சீருக்கு ஆகவில்லையென சீராய் அறிவதெல்லாம்
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

தாருக்கு வாழையுண்டு தான்முழுதும் கொடுப்பதுண்டு
பாருக்கு நீருமுண்டு பசிபோக்கும் உணவுமுண்டு
கூருக்கு செய்ததென்ன குவித்ததெல்லாம் என்னவென்று
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

கருணையின் முகில்களெல்லாம் கார்மழை பொழியும்
தருணமதை தவறவிட்டால் தான்போகும் இடமெங்கே
பருவமென வந்திட்ட பாங்குடை இப்பிறப்பில்
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே.

உருக்கமாய் சொன்னதெல்லாம் உனக்காக என்றுதானே
நெருக்கமாய் இருந்ததினால் நினைவிலே கொண்டு வந்தேன்
கருக்காக கடமைசெய்ய கருத்திலே பட்டதெல்லாம்
திருவேங்கடவன் தெரிசனத்தால் தெளிவாய் நெஞ்சே

தெளிந்த நெஞ்சத்தில் திருவருள் பொங்கும
பளிங்கு சுவர்காட்டும் பதுமையின் உருவமாம்
கழிந்த வினைகளினால் காலமும் நலமையாகும்
வழிந்திடும் பக்தியினால் வருவான் வேங்கடனே!

கவிஞர். சோமசுந்தரப் பெருமாள்—தங்கவயல்.

(B) பேரறிவினனான இறைவனும் சிற்றறிவினனான ஜீவனும் ஆகிய இவர்களில் இறைவன் ஏவுபவன், ஜீவன் ஏவப் பெறுபவன் என்றும்.

(C) பரமபதத்தில் நித்ய சூரிகள் எப்பொழுதும் கண்டு கொண்டே இருக்கிறார்கள் என்றும்.

மேற்படி கண்ட உண்மைப் பொருள்கள் மூன்று என்றதையும், இரண்டு என்றதையும், ஒன்று என்றதையும் ஏற்றுக் கொண்டு 'ப்ரஹ்மமே ஜகத்து' என்று அபேதமாகச் சொன்ன உபநிஷத்து வாக்கியங்களையும், நியமிக்கிறவன் இறைவன், நியமிக்கப்படுபவன் ஜீவன் என்றதையும், 'யஸ்யாத்ம ஸரீரம் யஸ்ய ப்ருதிவீ ஸரீரம் யம் ஆத்மா நவேத யம் ப்ருதிவீ நவேத' என்ற பிரஹதாரண்யோபநிஷத் வாக்யங்களைக் கொண்டு, மேலே அபேதமாகவும், பேதமாகவும் சொன்னதற்குப் பொருத்திக் காண்போம்.

இறைவன் எல்லா சேதநங்களாகிய உயிர்களையும், ஜடப் பொருள்களையும், உடலாகக் கொண்டு உயிராய் உறைவதாலே உடல் உயிர்களின் பேதம் காணும்படி என் உடல் என்று ஒரு கால் சொல்லியும், நான் இளைக்கிறேன் பெருக்கிறேன் என்று அபேதமாகவும் காணலாம்படி இருப்பது. ப்ரத்யக்ஷமாகையால் இப்படியே வெவ்வேறு பொருள்களான இறைவனும், ஜீவனும், ஜடப் பொருளும், இயல்பாகவே பேதமாய் இருக்க, இறைவன் தன் சத்தியமான இச்சையால், உயிரும், ஜடமும, கூட்டமான ஜகத்தை உடலாகக் கொண்டு உயிராகத் தான உறைதலால், அபேதம் போனறிருப்பதை உபநிஷத் இரண்டுபடச் சொன்னது என்று பொருந்தக் காட்டினார் ஸ்ரீமத் பகவத் ராமாநுஜர். இதையே பராங்குசர்,

திட விசும்பு எரி வளி நீர் நிலம்
இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய் அவை
அவை தொறும்

உடல்மிசை உயிர் எனக் கரந்து
எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட
சுரனே.

(திருவாய்மொழி 1-1-7)

என்று கூறியுள்ளார்.

வ்யாஸர் சொன்ன ப்ரஹ்மமீமாம்ஸையை (1) ஸமன்வயம், (2) அவிரோதம், (3) சாதனம், (4) பலன் என்று நான்கு அத்தியாயங்களாகப் பிரித்து அர்த்தம் எழுதியுள்ளார். இந்த அத்தியாயங்களின் பொருளைக் காண்போம்.

1. ஸமன்வயம் :

இது முதல் அத்தியாயம் ஆகும். வேதாந்த ஸாஸ்த்ரங்கள் ஜகத் காரண வஸ்துவாகிய ப்ரஹ்மத்தை அறிவிக்கும் திறன் இல்லை என்ற பூர்வ பட்ச வாதத்தைத் தள்ளி, ஜகத் காரணப் பொருளாம் ப்ரஹ்மத்தை நிரூபித்துக் காட்டுவது வேதாந்த சாஸ்த்ரந்தான் என்று நிர்ணயித்தார் இந்த அத்தியாயத்தில்.

2. அவிரோதம் :

இது இரண்டாம் அத்தியாயம் ஆகும். இந்தக் காரணப் பொருள் ஜடப் பொருள் என்றும், ஸாமான்ய ஜீவன் என்றும், அதிகாரி புருஷர்களான ப்ரம்மா, சிவன், தேவேந்திராதிகள் என்ற கொள்கைகளைத் தள்ளி, ஸ்ரீமந் நாராயணனே ஜகத்துக்குக் காரணம என்று நிர்ணயித்தார்.

3. சாதனம் :

இது மூன்றாம் அத்தியாயமாகும். மோக்ஷமாவது ப்ரஹ்ம ஸாயுஜ்யமாகையாலே, இந்த ப்ரஹ்மத்தை நிரந்தரமாக உபாஸனை பண்ணுவது, ப்ரஹ்மத்தின் ஸம தர்மத்தை அடையச் சாதனம் என்று நிர்ணயித்தார்.

4. பலன் :

இது நான்காம் அத்தியாயமாகும். நிரந்தரம் இடையறாத ப்ரஹ்ம உபாஸனை செய்தவன் முதிர்ந்த ப்ரேமையால் உடல் வீழ்ந்து அருவ உடலோடு அர்ச்சிராதி வழியிலே விரஜையில் மூழ்க அருவ உடல் விட்டு நலமந்த மில்லதோர் நாடு புகுந்து வரவேற்கப் பெற்று, ஸாலோக்ய ஸாமீப்ப, ஸாரூப்ய, ஸாயுஜ்யம் என்ற நான்கு வகை மோக்ஷங்களும் பெற்று ஜீவபரர்கள் அந்யோந்யம் மேலுள்ள காலமெல்லாம் கண்டு களிப்படைவார்கள். இதுவே ப்ரஹ்ம மீமாம்ஸையின் ஸாரப்பொருளாகும்.

கண்ணன் கீதையில் "வேதாநாம் ஸாம வேதோ஽ஸ்மி" என்றதால் வேதங்களில் வைத்துக் கொண்டு சாமவேதம் நான் ஆகிறேன் என்றான். ஆகவே நான்கு வேதத்தில் சாம வேதமே மிகச் சிறந்தது. இந்த சம வேதத்துள்ளும் உபநிஷத்து பாகமான சாந்தோகயம் அதைவிடச் சிறந்ததாகும். இதையே திருமழிசைப் பிரானும்,

"சாம வேத கீதனாய சக்கரபாணி யல்லையே" என்றார். மேலும் ஆழ்வாரின் அமுதவாக்குகளா,

"பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பாலூட்டாள் பாவை பேணாள
'வந்தானோ திருவரங்கன்வாரானோ?' என்றென்றே வளையும் சோரும்
சந்தோகன் பௌழியன் ஐந்தழல்
ஓம்பு தைத்திரியன் சாமவேதி
அந்தோ! வந்துஎன் மகளைச் செய்
தனகன் அம்மனைமீர்! அறிகிலேனே.

(பெரிய திருமொழி 5-5-9)

என்று உபநிஷத்துக்களைப் பற்றி அருளிச் செய்தார்.

உபநிஷத்தின் சாரமான சாந்தோக்யோபநிஷத்தையே திருவாய்மொழியாகத் தமிழ்ப்படுத்தினார் ('விஷ்ணு சித்த விஜயம்' - முதல் பாகம்-326 பக்கம்). நம்மாழ்வார் என்று நம் ஆசார்யார்கள் நிர்வஹித்துப் போருவர்கள். 'ஓமித்யேத தக்ஷர முத்கீத முபாஸீத' (ஓம் என்னும் தொடங்கும் இந்த உத்கீதத்தை உபாஸிக்கக்கடவன்) என்று ஆரம்பிக்கிறது சாந்தோக்யோபநிஷத்.

இதையே நம்மாழ்வாரும் தம் திருவாய் மொழியைத் தொடங்கும் போது 'ஓம்' என்று ஸம்ஹிதாகாரமாகச் (சேர்ந்த நிலையில்) சொன்னால் இது சிலர்க்கே அதிகாரமாகக் கூடும் என்று பார்த்து, 'உயர்வற' 'மயர்வற' 'அயர்வறும்' என்று 'அ' காரம், 'உ' காரம், 'ம' காரங்களாகப் பிரித்து ஓங்காரத்தை அருளிச் செய்தார். 'அ' காரத்தை முதலில் இட்டுச் சொல்லாமல் 'உ' காரத்தை முதலில் சொன்னதற்குக் கருத்து என் என்னில், "ஸாம்ந உத்கீதோ ரஸ:" (ஸாம வேதத்திற்கு ரஸம் போன்றது உத்கீதம்) என்று சொல்லப் பட்ட உத்கீதமே தம்மால் விவரிக்கப் படுகிறது என்பதைக் காட்டுவதற்காக 'உ' என்று ஆரம்பித்து, பிரபந்த முடிவில் 'பிறந்தார் உயர்ந்தே' என்பது 'த' காரத்தில் முடித்தார் என்று வேதாசார்ய பட்டர் உபதேசம்.

திருவாய்மொழியின் முதற்பாட்டில் நான்காவது அடியிலும் 'துயரறு' என்று 'த' காரத்தை எடுத்ததும் 'உத்' கீதத்தை உணர்த்துவதற்காகவே என்று பெரியோர் பணிப்பர். உத்கீதமாவது உத்க்ருஷ்டனாய்இருக்கையால் 'உத்' என்னும் திருநாமத்தை உடைய எம்பெருமானைப் பற்றிய கீதம் ஆகும். ஆகவே திருவாய்மொழியே உபநிஷத்தின் ஸாரமாகும்.

★



# முதலாழ்வார்கள்

" பொய்கையார் பூதத்தார் பேயார்-
புகழ்மழிசை
ஐயனருள் மாறன் சேரலர் கோன்
தூய்யபட்ட
நாதன் அன்பர்தாள் தூளி
நற்பாணன நன்கலியன்
ஈதிவர் தோற்றத்தடைவா மிங்கு "

என்று ஸ்ரீ மந் மணவாள மாமுனிகள் தனது உபதேச ரத்தின மாலையில் முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் முதலான வர்களின் மாண்பை உலகத்துக்கு எடுத்துக்காட்டியுள்ளார் என்பதை அறிகிறோம்.

மேலும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும் இவ்வாறு கூறு கிறார்.

" ஆழ்வார்களேற்றம் அருளிச்
செயலேற்றம்
தாழ்வாதுமின்றி அவை தாம்
வளர்ந்தோர் ஏழ்பாரும்
உய்ய அவர் செய்த வியாக்கியயை
கள் உளதெல்லாம்
வைய்ய மறியப் பகர்வோம் வாய்ந்து "

இவ்வாறு வைய்யம் புகழ்ந்து, வைணவத் தொண்டும், ஸ்ரீமந் நாரா யணனின் புகழ் பாடுவதே கருத்தாக வும்இருந்து வந்த முதலாழ்வார்களின் வைபவத்தை இங்குக் காண்போம்.

மற்றுமுள்ள ஆழ்வார்களுக்கு முன்னேவந்துதித்ததாலும், நற்றமிழ் நூறசெய்து நாட்டைஎய்த பெருமை பெற்றதாலும் இம்மூவரும் முதலாழ் வார்கள் என அழைக்கப்பட்டார் என்பது வரலாறு.

**பொய்கையார் :**

தூவாபரயுகத்தில் ஸித்தார்த்தி வருடத்தில் ஐப்பசி மாதம் திரு வோண நக்ஷத்திரத்தில் திருமாலின் சங்கமான பாஞ்சஜனய அம்சமாய் கச்சி என்னும் காஞ்சீபுரத்தில் சொன்னவண்ண செய்த பெருமாள் அதாவது யதோத்தகாரி பெருமாள் எனப்போற்றப்படும் திவ்யதேசத்தில் உள்ள புஷ்கரணியில் பொற்றாமரை யில் தோன்றினார்.

**பூதத்தாழ்வார் :**

பொய்கையார் தோன்றிய மறு நாள் அவிட்ட நக்ஷத்திரத்தில், திரு கடன்மலை, தற்போது மஹாபலி புரம் என்று அழைக்கப்படும் திவ்ய தேசத்தில், மலர்ந்த நீலோத்பல மல ரில் திருமாலின் கதையின் அம்சமாக தோன்றினார்.

**பேயாழ்வார் :**

பூதத்தார் தோன்றிய மறு நாள் சதயநக்ஷத்திரத்தில் திருமயிலை என்கிற மயிலாப்பூரில் திருமாலின் வாளின் அம்சமாக, ஒரு கிணற்றில் நெய்தல் நில மலரான செவ்வல்லிப் பூவில் தோன்றினார்.

இம்மூவரும் தாயின் கர்பவாசம் அறியாதவர்கள். தோன்றியது முதல் திருமாலின் குணவிசேஷங்களால் ஆட்கொண்டும் அருள் பெற்றும், அவனுக்கே அடிமை பூண்டு, அவனின் திவ்ய மங்கள சேவையின் புகழ்பாடி யும், அவனது லீலா விநோதங்களை கண்டு ஈர்ந்து, உலகத்துக்கு அவனின் பெருமையைக்கூறியும், அவனது அடி யவர்களுக்கு தொண்டு புரிந்தும், ஓரிடத்தில் நிலை இராது அவன் புகழ் பாடிவந்தார்கள்.

ஒருசமயம் பொயகையார், மிருகண்டு முனிவரின் ஆஸ்ரமத்தில் ஒரு இரவு தங்குவதற்கு ப்ராததுக்க, ஒருவர் படுககலாமென ஓரிரவு படுக்க இடம் அளிததார. இவர் படுததப் பிறகு பூதத்தார் தங்க இடம கேட்டுவர 'இருவர் இருக்கலாம்' எனறு பொய் கையார் கூறி, இருக்க இடம் கொடுத் தார். சிறிது நேரம் சென்ற பிறகு, பேயார் இடம் வேண்டி வர, 'ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிறகலாம்' எனக்கூறி அவருக்கு நிற்க இடம் அளித்தார். மூவரும் கூடி நின்று தங்களை ஒன்று சேர்த்த இறை வனின் குணங்களை புகழ்ந்து அள வளாவினர். அவ்வமயத்தில் ஸ்ரீமன் நாராயணனே நடுவில் புகுந்து இவர் களை நெருக்கத் தொடங்கினார். இவ்வாறு நெருக்கம் உண்டாக்குவது இறைவனே என்றறிந்த மூவரில் முதல்வரான பொய்கையார்,

" வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக-செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்
சொல்மாலை
இடராழிநீங்குகவே என்று" என்றும்,

திரு. எஸ். லக்ஷ்மி நரசிம்மன்
விஜயவாடா.

இரண்டாமவரான பூதத்தார்,

" அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிநதையிடு திரியா -
நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன்
நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான் "

யென்றும்,

மூன்றாமவரான பேயாழ்வார்,

" திருக்கண்டேன் பொன்மேனி
கண்டேன் திகழும்
அருக்கனணி நிறமும் கண்டேன்-
செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் - புரிசங்கம்
கைக்கண்டேன்
என்னாழி வண்ணன் பாலின்று "

என்றும், அவர்கள் இறைவனின்புகழ் பாடினார்கள். இவ்வாறு இறை வனை கண்டமை "மூன்று திருவந் தாதி"களாக வடிவெடுத்தது என்ப தாகும்.

இவவாறு பலகாலம், பல திவ்ய தேசங்கள் சென்று இறைவனின் புகழ் பாடியும், வைணவ சித்தாந்தத்தை உலகததுக்கு அளித்தும், மக்களை உஜ்ஜீவித்து வைகுந்தம் ஏகினர்.

" திருகச்சி மாநகரம் செழிக்க
வந்தோன் வாழியே
நல்ல திருக்கடல் மல்லை நாதனார்
வாழியே
மருக்கமழும் மயிலை நகர் வாழ
வந்தோன் வாழியே "

என்று இம்மூவரையும் போற்றிப் புகழ் பாடுவோமாக.

# அயோத்தி காட்டும் நல்வழி

குருவின் கருணையிருந்தால் குருவையும் மிஞ்சிய ஆற்றல் வந்துவிடும் என்பது நம்மவரின் நம்பிக்கை. கம்பன் தனது காவியத்தில் முதல் நூல் முனிவரான வான்மீகருக்கு ஏற்றம் கொடுத்துப் பாடுகிறான். அசுணம் என்ற ஒரு பிராணி, இசையில் விருப்பமுடையது. நல்ல இசையைக் கேட்டு மயங்கி நிற்கும்போது, திடீரென இசையை நிறுத்தி, பறைக்கொட்டுக் கொட்டிவிட்டால், அந்த ஓசை தாங்காது அசுணம் உயிரை விட்டுவிடும். அதுபோல வால்மீகியின் காவியமான இனிய நூலைக் கேட்ட செவிகளுக்குத் தன்னுடைய பாடல் பறைக் கொட்டுப் போல் துன்பத்தை அளிக்குமே என்கிறான்.

நான்கு அடிகளோடு கூடிய வான்மீகியின் ஸ்லோகங்களில் ஒரு அடியில் ஒரு வார்த்தையில் ஒரு எழுத்தை மாற்றி வேறு எழுத்தைப் போட்டால் சரியாயிராது. அதுபோன்ற சொற்களால் கம்பன் பாடிய காவியத்தைச் செவியில் நாவின் சுவை கொண்டு அனுபவிப்பார்களாம் தேவர்கள்கூட. அதை நான் வர்ணிப்பது கள்ளைக் குடித்துவிட்டு ஊமை உளறுவது போல முடியும் என்கிறான் கவிஞன். 'மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன்' என்கிறான். மூங்கையான் என்பதற்குப் பிறந்தது முதல் அழாது, பால் குடிக்காது, மௌனமாக இருந்த நம்மாழ்வாரைக் குறிப்பதாகப் பொருள் காண்பர் சில அறிஞர். 'என் இதயத்திலிருந்து நம்மாழ்வார் பேசுகிறார். நான் அதைத் திரும்ப மொழிகின்றேன்' என்று பொருள் காண்பர்.

வைணவ சமயத்தின் முக்கிய குருவான நம்மாழ்வாரின்மீதும், முதல் நூல் முனிவரான வான்மீகியின்மீது வைத்த குருபக்தியின் காரணமாகவும் கம்பன் வான்மீகியையும் மிஞ்சிவிட்டான் எனலாம். அறிஞர். வ. வே. சு. ஐயர் "அது வான்மீகி ராமாயணமல்ல, அதைக் காட்டிலும் அழகு மிகுந்த காவியம்" (It is not Valmiki's Ramayana, but it is a grander poem) என்பார்.

அயோத்தியின் பெண்களைப் போல் நடை போடும் அன்னம் (அன்னம் மாதிரிப் பெண்களின் நடையில்லை. அயோத்தியின் பெண்கள் மாதிரி அன்னங்கள் நடக்கின்றன என்பது கம்பனின் துணிபு) தனது குஞ்சை அங்குள்ள குளத்தில் உள்ள தாமரையில் கண் வளரவிட்டுவிட்டதாம்! என்ன சொகுசான மெத்தை! தண்ணீர் குடிக்க வந்த எருமையொன்றின் பால்மடுவில் தற்செயலாகத் துள்ளிய ஒரு மீன் பட, தன் மார்பில் எவரோ தீண்டிய உணர்ச்சியடைந்த எருமை வீட்டிலிருந்த கன்றை நினைத்துக் கொள்ள, அதன்மடி சுரந்து பால் வழிந்து தாமரைத் தொட்டியில் தூங்கும் குஞ்சின் வாயில்விழ, அதனால் அன்னக் குஞ்சு தன் பசி நீங்கி, தண்ணீரில் கத்தும் தவளையின் கீத விநோதத்தில் மயங்கி அயர்ந்து தூங்கிவிட்டதாம். ஒரு அன்னக் குஞ்சுக்கூட சோற்றுக்குப் பஞ்சமில்லாது விளங்கும் நாடு என்று காட்டுவதுடன், எருமைக்கன்று சாப்பிட்டு வளர வேண்டிய பாலை அன்னக் குஞ்சு அருந்தி மகிழ்ந்து உறங்கியது எனக் கூறுவதன் மூலம் இராமபிரானுக்கான அரசைப் பரதனுக்கு அளிக்கக் கூடிய நாடு அது என்னத் தொனிப் பொருள் வைத்துள்ள நயம் பாராட்டத் தக்கது. இதனாலேயே ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என ஒரு பழமொழி ஏற்பட்டதுபோலும்! கருணாமூர்த்தியான இராமன் பிறந்த நாடு செழுமை நிறைந்தது, பிறருக்கு உதவும் பெருமையுடையது என்றெல்லாம் நினைக்கச் செய்கிறது அன்னக் குஞ்சின் வாழ்க்கை!

அந்த நாட்டில் வயது அழகு முதலான பொருத்தமுள்ள திருமணங்கள் நடைபெறுகின்றன. இசை ஏறி இறங்கும் தன்மையுடையது. இதனை ஆரோகணம்-அவரோகணம் என்பர். இயல் என்பது வசன உருவமாக நேர் வழி செல்லும் பருந்து போலச் செல்ல, இசை நிழல் போல, மலையிலும் மடுவிலும் சமதரையிலும் ஏறி இறங்குவது போலவும் பாடப்பட்டு, இசையின் இனிமையை அனுபவிக்கின்றனர். நல்ல சொற்களைத் தன்னிடையே கொண்ட இலக்கியம் வரலாறு முதலானவற்றைச் செவியையே வாயாகக் கொண்டு அமுதமாகப் பருகுகின்றனர். விருந்தினர்கள் தம் வீட்டிற்கு வந்தால் அதனை விழாவாகவே ஏற்று மகிழ்ந்து கொண்டாடுவது அந்நாட்டினர் வழக்கம் என்கிறான்.

---

*திரு. வே. தியாகராஜன்,*
*சென்னை-61.*

---

பொருந்திய மகளிரோடு வதுவையில்
பொருந்து வாரும்
பருந்தொடு நிழல் சென்றன்ன இயல்
இசைப்பயன் துய்ப்பாரும்
மருந்தினும் இனிய கேள்வி செவியுற
மாந்துவாரும்
விருந்தினர் முகங்கண்டன்ன விழா
வணி விரும்புவாரும்.

எனவே அந்நாட்டில் நல்ல இசை நல்ல செவிக்கினிய சொற்பொழிவுகள், பொருத்தமான திருமணங்கள், விருந்தினருக்கு வரவேற்பு முதலானவையுள்ள மகிழ்ச்சி பொருந்திய வாழ்வு மக்களுக்கு இருந்தது என்பது குறிப்பு.

அந்த நாட்டுப் பெண்கள் கல்வியும் செல்வமும் நிறைந்தவர்களாயிருந்தனர். கல்வி மட்டுமிருந்து வறுமையிருப்பதில் பயனில்லை. செல்வம் மட்டும் இருந்து கல்வியில்லாவிட்டாலும் பயனில்லை. எனவே அந்நாட்டுப் பெண் மக்கள் பொருந்து செல்வமும் கல்வியும் பூத்து விளங்கினர். ஆதலால் யாவருக்கும் கட்டாயப்படுத்தி விருந்தூட்டினர். வருந்தி வந்தவர்க்கு ஈந்தனர் என்கிறான் கவிஞர். வறுமையே இல்லாத அந்த நாட்டில் வந்தவருக்கு வருந்தி ஈந்தனர் என்றார். ஏற்பது இகழ்ச்சி எனக்கூறிய நீதி நூலில் அடுத்த வரி ஐயம் இட்டுண் என முரண்பாடு காணப்படுகின்றதல்லவா? இதையே ஆண்டாள் அம்மை தனது திருப்பாவையில் ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி என்கின்றார். பிச்சை என்பது பல்லைக் காட்டிக் கெஞ்சி, வறுமை பேசி வாங்கும் தொழில். இத்தகைய காரியம் கோசல தேசத்தில் கிடையாது. அங்கு வறுமையில்லாததால் வள்ளல்கள் இல்லை என்பது கம்பன் வாக்கு. எனவே ஐயம் என்பது தக்க சான்றோரை அழைத்து அவருக்கு நிறைய உணவளிப்பது என்பதாகும். கோசல நாட்டுப் பெண் மக்கள் ஐயமிட்ட அழகைக் கூறிய கம்பன் 'வருந்தி வந்தவர்க்கு' ஈந்தனர் என்றான். திருவிளையாடற் புராணத்தில் இதே அழகிய செயலை 'வழி மறுத்தி அருத்தினர்' என்பார். வழி மறித்து நிறுத்தி உணவிட்டு அனுப்பினர் என்பது குறிப்பு.

கம்பனது கவிதையைப் படித்தவருக்கு தேவலோக இன்பம்கூடப் பெரிதாகத் தோன்றாதாம். அதுபோல

"தவஞ்செய்து தேவலோகம் சென்றவர்கள் கீழுலகத்திற்கு இறங்கி வந்து அயோத்தியில் மனிதராகப் பிறந்து வாழ வேண்டுமென விரும்பக் கூடிய சிறப்புள்ளது அந்நகரம்", என்கிறது கவிஞனின் வாக்கு. இதை மோக்ஷ தூஷணம் என்பர் பெரியோர். இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருவாக்குப் போன்று இந்திரலோகத்தைக் காட்டிலும் மேன்மையானதாக விளங்குகிறது அயோத்தி என அறிகிறோம்.

அயோத்தியின் கோட்டை மதிற்சுவர்கள் உயரமாகவும் சம சதுரங்களாகவும் விளங்குகின்றனவாம். மலைகள் போன்ற மதில்கள் என்று கூறலாம் என்றால் மலைகள் உயர்ந்தும் தாழ்ந்தும் வளைந்து வளைந்தும் செல்லக் கூடியவை. எனவே அயோத்தியின் கோட்டை மதிலின் உயரத்தையும் சதுரத்தையும் கூறவந்த கவிஞன் "பெரியோர்களால் எழுதி வைக்கப் பட்ட நூல்களில் கூறப்பட்டுள்ள ஒழுக்கங்களை பயபக்தியுடன் பயின்று வாழும் உத்தம குணத்தினன் ஒருவனின் உயர்வு போன்றது மதில்களின் உயரம்" என ஒழுக்கத்தின் உயர்வைக் குறிக்கிறான்! ஒழுக்கத்தின் உயர்வை இதைக் காட்டிலும் சிறப்பாக யார் கூற முடியும்?

அந்த நாட்டுப் பெண் மக்கள் கையில் வீணை வைத்துக் கொண்டு பாடுகின்றார்களாம். தினமும் அவர்களது பாட்டைக் கேட்டுப் பயின்ற கிளிகள் பாட ஆரம்பித்துவிட்டன. சுருதி லயம் தவறாமல் பாடும் கிளிகளின் கீத நயத்தில் மயங்கி அந்தப் பெண்கள் கண்மூடித் தூங்க ஆரம்பித்ததும், பெண்கள் வாசிக்கும் யாழின் இனிமையில் மயங்கிக் கிளிகளும் தூங்கி விட்டனவாம். 'உறங்குவமகளிரோடு ஓதும் கிள்ளையே' என கோசல நாட்டவரின் இசைப் பயிற்சியின் பெருமைதான் எவ்வளவு அழகாகக் காட்டப் பெறுகின்றது.

மாலை நேரங்களில் பெண்கள் விளக்கேற்றும் பெருமை கூற வந்த கவிஞன், அழகிய இசைபாடிக் கொண்டு, கையில் விளக்கேந்தி வாயிலில் வரிசையாக தீபாலங்காரம் செய்யும் பெண்களின் அழகிய மேனிகளும் விளக்குகள் போலவே ஒளி விசுகின்றன. 'மணிவிளக்கல்லன மகளிர் மேனியே' என ஒழுக்கமும், குணமும் அழகிய குரலுடன் கூடிய அப்பெண்களே விளக்குகள் போல ஒளியுடன் விளங்குகின்றனர் என்கிறான்.

ஒரு பெண் தன் கணவனைச் சித்திரமாக எழுதுகிறாள். அது உயிரோவியமாக அமைகிறது! அந்தச் சித்திரத்திலுள்ள ஆடவன் கண்களை இமைத்தால் கூட வியப்பில்லை! ஆனால் கற்புக்கரசியாக இல்லக விளக்காக விளங்கும் தன் மனைவியைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையால் சித்திரத்திலுள்ள ஆடவன் கண்களை இமைக்கவில்லை எனக்காரணம் கூறுகிறான் கவிஞன்.

அரண்மனை வாயிலின் முதல் மண்டபத்தில் அயல் தேசத்து அரசர்கள் கொண்டு வந்து கொடுக்கும் கப்பப் பணங்களை வாங்கிக் கணக்கெழுதி வைக்கும் கஜானா. இரண்டாவது மண்டபத்தில் பரத நாட்டியம் கற்பிக்கப் பெறுகின்றது. மூன்றாவது மண்டபத்தில் வேதம் கற்பிக்கும் பாடசாலை. நான்காவது மண்டபத்தில் சிற்பம் ஓவியம் முதலான பல கலைகள் கற்பிக்கப் பெறுகின்றன.

மன்னவர் தருதிறை அளக்கும்
மண்டபம்
அனமென் நடையவர் ஆடும்
மண்டபம்
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்

எனக் கூறுவதால் கோசல தேசத்தில் செல்வத்தைக் காட்டிலும் கல்விக்கு மூன்று பங்கு மேன்மையான மரியாதையை அரசாங்கம் காட்டியது என்று தெரிகிறது.

இவ்வளவு பெருமை பொருந்திய நாட்டின் அதிபதி, ஏன்? உலகாதிபதியான ஒரு சக்கரவர்த்தி-உலகாதிபதி மட்டுமல்ல-ஏழு உலகங்களுக்கும் அதிபதி - ஆம்! தரும மூர்த்தியான இராமனை உலகுக்கு அளித்த தரும மூர்த்தி எனப் புவிச் சக்கரவர்த்தியான தசரதனை நமக்கு அறிமுகப் படுத்துகிறான் கவிச் சக்கரவர்த்தியான கம்பன்.

குடிகளுக்கு அரசன் தாய் போன்றும் தந்தை போன்றும் விளங்குகின்றான் என்றெல்லாம் கூறிய கம்பன், குற்றவாளி என்பவன் நோயாளி போன்றவன்-அவனுக்குத் தண்டனை அளித்து குற்றமெனும் நோயை நீக்கும் மருந்து போல் விளங்குகின்றானாம் தசரதன். மருத்துவன் போன்று அல்ல-மருத்துவன் ஞாபக மறதி போன்ற நிலையில் தவறான மருந்தைக் கொடுத்துவிடலாம் - எனவே தவறாது தன் வேலையைச் செய்யும் மருந்து போல் விளங்குகிறான் தசரதன் எனக் குறிப்பிடப் பெறுகின்றது.

ஏழையான ஒருவன் தனது சிறிய நிலத்தை வெகு ஜாக்கிரதையுடன் காக்கின்றான். அந்த நாட்டில் குற்றமில்லாததால் சிறு வயது மரணங்கள் போன்ற துக்கங்கள் கிடையாது. யாவரும் நல்ல செய்கைகளையே உடையவராக இருப்பதால் கோபம் என்பதே இல்லை. அதர்மம் இல்லாததால் தருமம் என்பதைத் தனியாகத் தேட வேண்டியதில்லை. உயர்தாழ்வு என்பது அந்நாட்டில் காணப்படவில்லை.

தரும உருவான இராமன் பிறக்கப் போகும் நாட்டில் மக்கள் நற்குண, நற்செய்கைகளுடன் விளங்கினர். நல்லன எல்லாம் நிரம்பி நாட்டை நல்லோனான அரசன் ஆட்சி செய்கிறான் என அயோத்தியை ஒரு பூலோக சுவர்க்கமாகக் காட்டுகிறான் கவிஞன். இத்தகைய நல்ல நெறியில் நாமும் வாழ்ந்து நாடு நலம் பெறத் திருப்பதி வாழ்த் தெய்வ நாயகனின் அருள வேண்டுவோமாக! ★

(12-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கிராமத்துப் பெண் அவனுடன் வாழ விருப்பமின்றி இறைவன் திரு மாலையே மணம் செய்துகொண்டு வாழ முடிவு எடுப்பதாகப் பாட லொன்று கிடைத்துள்ளது.

"அம்மா என்னை பெத்தவளே
பேரு வெச்சவளே
குடிகாரனுக்கு கொடுத்தவளே—நா
பக்கத்துல படுக்கமாட்டே(ன்)—எம்மா
பிள்ளையும் பேருக்கமாட்டேன்
பெரும்மாளு மோகம் கொண்டு—நா
திரும்மலிக்கி போகப்போறேன் "

இதுபோன்றதொரு தெலுங்குப் பாட லும் சேகரிப்புப் பணியின்போது கிடைத்துள்ளது.

"நா ரங்கம் சீரங்கம்
பாயிக்காடா பைரங்கம்
பத்மகிரி சுப்புலு
தாகுபோத்து நா மொகுடு
வாடென்ட்ட நே போனு
ஏடுகொண்டல எங்கன்னா
எப்புடய்யா ஈ போரு தீரேதி
நின்னே நே பெள்ளாடுத்தா
நீ வைப்பே சேரேத்தா "

" நா ரங்கம் சீரங்கம்; கிணற்றுக்கரு கில் பைரங்கம்; பத்மகிரி சுப்புலு என் கணவன் குடிகாரன். அவனுடன் நான் வாழமாட்டேன். ஏழுமலை யானே ஸ்ரீ வெங்கடேஸ்வரனே; எப் பொழுது இந்த வினைதீரும்; உன் னையே நான் மணப்பேன்; உன் னிடத்திலே நான் குடியமைப்பேன் " என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

## அறுவடைப் பாடல் :

களையெடுப்புக்குப் பின்னர் பயிர் நன்கு வளர்ந்து அறுவடைக்கு வந்து விடுகின்றது. அறுவடை காலங் களில் கிராமங்களில் சலசலப்பு அதி கம். அறுவடையை ஆண்களும், பெண்களும்சேர்ந்து செய்கின்றனர். இந்நேரத்தில் பாடப்படும் பாடல்கள் அறுவடைப் பாடல்களாகும். தெலுங்கில் 'கோத்தல பாட்டலு' என்பர். பெரும்பாலான பகுதிகளில் பெண்கள் அறுவடைப்பாடல்களைப் பாடுகின்றனர். நடவு, களை யெடுத்தல் முதலிய வேலைகளை விட அறுவடை வேலைகள் முக் கியம் வாய்ந்தவையாகும். வெயில், குளிர், மழை என்றும் பாராமல் அறு வடை தொடங்குவர். இல்லாவிடில் அறுவடை நாசமாகிவிடும். பெரும் பாலும் புதன்கிழமை நாட்களில் விதைப்பதையும் வெள்ளிக்கிழமை நாட்களில் அறுவடைச்செய்வதையும் தமிழ், தெலுங்குநாட்டுப்புற மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

"கார் வண்ணனே
கருப்பழகா
களத்து மோட்டுல நெல்லுருக்க
கய்னியில தாளிருக்க
மய வந்த காரணமென்னா
மண்ணு மேல பேஞ்ச மய
மல மேல பேயட்டுமே
மஞ்சி வளரட்டுமே
பூ மேல பேஞ்ச மய
பூந்தோட்டத்துல பேயட்டுமே
பூவும் மலரட்டுமே—மல
உச்சில மய பேஞ்சா—எ(ன்)
உள்ளம் குளிருதய்யா
கய்னீல மய பேஞ்சா
கஸ்டம் வந்து சேருமய்யா
அய்யா பெரும்மாளே
பெரும் மய வேணாமய்யா "

தெலுங்கிலும் இதுபோன்றதொரு பாடல் கிடைத்துள்ளது.

"வானொச்சே வரதொச்சே
வரதள்ளு தொர்லொச்சே
ஏடு கொண்டல சாமி
ஏமி சேத்துனோ
எத்தக்குபோயே வரி பண்ட்டா
வானல்லு மா கொத்து
வரதள்ளு மா கொத்து
திரபதி கொண்ட மீத
திரிகி சூஸ்தே வானன்ட்டா
நகரி கொண்ட மீத
நடுமத்ய வானன்ட்டா
வானொத்து வரதலொத்து
நா சாமி ரங்கா
மானல்லோ குரிசித்தே
மானைனா பண்டுனு
குண்டல்லோ குரிசித்தே
சாபைனா ஆரகிஞ்சு
தோட்டல்லே குரிசித்தே
மொக்கலன்னி பூத்துனோ
வானொத்து வரதலொத்துநா சாமி"

" மழை வந்தது வெள்ளம் ஓடியது; வெள்ளம் பயிர்களையெல்லாம் அழித்தது; நான் என்ன செய்வேன். மழை எங்களுக்கு வேண்டாம். வெள் ளம் எங்களுக்கு வேண்டாம். திருப் பதி மலைமேலே திரும்பிப் பார்த தால் மழை; நகரி மலைமேலே நடு வில் மழை. மரத்தில் மழைபொழிந் தால் காய்கள் கனிக்கும். குளத்தில் மழைபொழிந்தால் மீன்கள் வளரும். தோட்டத்தில் மழை பொழிந்தால் மலர்கள் மலரும்; எமக்கு மழை வேண்டாம், வெள்ளம் வேண்டாம்" என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

ஏட்டறிவில்லாத பாட்டாளிகள் தங்களுடைய உழைப்பின்போதும் இறைவனுக்கு முதலிடம் தருவதை இப்பாடல்கள் உணர்த்துகின்றன. பாலுணர்ச்சிப் பாடல்களிலும் இறைவனுடையப் பெயரைச் சேர்த் துக் கொள்வது அவர்களுடைய அறி யாமையைக் காட்டுகிறது. இப் பாடல்களுக்குத் தனிப்பட்ட இசை இல்லை. இடத்திற்கேற்ப இசைகள் மாறுபடுகின்றன. இம்மாவட்டத் தில் வாழும் தமிழர்கள் முருகன், சிவன், வினாயகர் முதலிய தேவா களை மிகுதியாக வணங்கிவந்தாலும் திருமாலிடம் ஆழ்ந்த பக்தி கொண் டுள்ளனர் என்பதைப் பாடல் வழி நின்று உணரலாம். இம்மாவட்டத் தில்வாழும் தமிழ், தெலுங்கு நாட்டுப் புற மக்களுடைய வாழ்வில் சதா 'கோவிந்தா' 'ஏடுகொண்டலவாடா' 'ஏழுமலையானே' 'வெங்கடேச, போன்றவார்த்தைகள் ஒரு நாளைக்கு மூன்று முறையாவது ஒலிப்பதைக் காணலாம். வாழ்நாளில் மூன்று முறையாவது திருப்பதி சென்று திரு மொட்டை போட வேண்டும் என்ற வழக்கம் தமிழரிடையேயும், தெலுங் கரிடையேயும் காணப்படுகின்றது. ★

# திருவெள்ளூர்



திரு. டி. ஸ்ரீநிவாஸன், சென்னை-35.

வைணவர்களால் புனிதமாகக் கருதப்படும் 108 திருப்பதிகளில் திருவெள்ளூர் தலமும் ஒன்றாகும். இதனையடைய சென்னை - அரக்கோணம் இருப்புப் பாதையில் திருவெள்ளூர் இரயில் நிலையத்தில் இறங்கி சுமார் 3 மைல் தூரம் டவுன் பஸ்ஸில் போகலாம். மற்றும் சென்னையிலிருந்தே காரிலோ பஸ்ஸிலோ போய் கோயிலுக்கருகில் இறங்க முடியும்.

இந்த திவ்ய க்ஷேத்திரத்துக்கு ஸ்தல புராணத்தில் காணப்படும் பெயர் "திருஎவ்வுள்" என்பதாகும். எம்பெருமாள் தானே தேடி வந்து இத்தலத்தில் பள்ளிகொண்ட திருக்கோலத்தில் பக்தர்களுக்கு அருள்புரிவதால் இப்பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது. மூலவர் திருநாமம் வீரராகவப் பெருமாள். புஜங்க சயனம். கிழக்கே திருமுக மண்டலம். தாயார் கனகவல்லி, வஸுமதி என்றும் அழைக்கப்படுகிறார். தாயாருக்குத் தனிச் சன்னிதி உள்ளது.

புராண காலத்தில் இத்தலத்தை புண்யாவர்த்த க்ஷேத்திரம் என்று அழைத்தனராம்மற்றும்இவ்விடத்தில் வீக்ஷாரண்யம் என்கிற தபோவனம் இருந்ததாம். இவ்வனத்தில் மிகவும் இனிய பழங்களைத் தரக்கூடிய மரங்களும் யாகத்துக்கு உபயோகமான ஓஷதிகளும், மல்லிகை செண்பகம் போன்ற புஷ்பங்களால் பரிமளித்தும், கொடிய மிருகங்களும், ஹம்ஸம், மயில், குயில் முதலிய பக்ஷிகளும் நிறைந்து வசிஷ்டர், வாமதேவர், வ்யாசா முதலிய முனிவர்கள் வசித்து வந்ததாகக் கூறப்படுகிறது.

வைணவ ஆழ்வார்களான திருமழிசை ஆழ்வார் திருமங்கை ஆழ்வார் இத்தலத்துக்கு விஜயம் செய்து மங்களாசாஸனப் பாசுரங்கள் பாடியுள்ளார்கள். திருமங்கையாழ்வார் பாசுரங்களில் எளிய சொற்களும் இனிய பொருளும் கொண்ட கீழ்க்கண்ட பாசுரம் என்னைக் கவர்ந்தது.

முனிவன், மூர்த்தி மூவராகி வேதம்
விரித்துரைத்த
புனிதன், பூவைவண்ணன், அண்ணல்
புண்ணியன், விண்ணவர்கோன்
தனியன், சேயன், தானொருவ-
னாகிலும் தன்னடியார்க்கு
இனியன், எந்தை, எம்பெருமான்
எவ்வுள் கிடந்தானே

வடலூர் ஸ்ரீராமலிங்க அடிகளாரும் இத்தலம் பற்றிப் பாடியுள்ளார். அதனைப் "போற்றி திருப் பஞ்சகம்" என்றழைக்கிறார்கள்.

இந்த க்ஷேத்திரத்தின் ஸ்தல புராண புத்தகத்தில் கோவிலுக்கு அருகில் உள்ள திருக்குள மஹிமை பற்றி கூறப்பட்டுள்ளது. இதன் பெயர் ஹ்ருத்தாப நாசிநீ என்பது.



கோயிலின் முன் தோற்றம்

ஹ்ருத் = ஹ்ருதயத்திலுள்ள, தாப = தாபங்களை, நாசிநீ = போக்கடிக்க வல்லது. சிலர் ஹ்ருத்பாபநாசிநீ என்றும் கூறுகிறார்கள். இதனால் மனதால் நினைத்த பாபத்தையும் போக்கடிக்கக் கூடியது என்றும் பொருள்படும்.

க்ருதயுகத்தில் ஸ்வாயம்புவ மனுவின் வம்சத்தில் பிறந்த ப்ரத்யும்ந



மஹாராஜன் என்னும் ஒரு புண்ய புருஷன் இத்தீர்த்தக்கரையில் நீண்டகாலம் தவமியற்றித் திருமால் தரிசனம் பெற்றுப் பயனடைந்த வரலாறு இத்தலபுராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. திருமால் தைமாதம் அமாவாசை தினம் அம்மன்னனுக்குக் காட்சியளித்து அனேக வரம் அளித்த படியால் இத்திருக்குளத்தில் அமாவாசை தினம் ஸ்னானம் செய்வது மிகவும் புனிதமானது என்று கருது கிறார்கள்.



அருள்மிகு கனகவல்லித் தாயார்

சிவபெருமான் மனைவியான தாக்ஷாயணியின் தகப்பன் தக்ஷன் ஒரு பெரிய யாகத்துக்கு ஏற்பாடு செய்து அதற்குத் தன் மகள், மருமகன் தவிர எல்லோரையும் அழைத்திருந்தான். தன் தகப்பன் மீதுள்ள பாசத்தால் சிவபெருமான் கூறியும் கேளாமல் தாக்ஷாயணி அந்த யாக சாலைக்குப் போய்த் தக்ஷனையும் பார்த்தாள். அப்படியும் தன் மகளை வரவேற்காமல் அவமதித்துவிட்டான். அதைப் பொறுக்காமல் தாக்ஷாயணி அங்கேயே உயிர் விட்டாள். அதனையறிந்த சிவபெருமான் மஹா கோபங்கொண்டு தன் நெற்றிக்கண்ணைத் திறந்து வீரபத்ரன் என்பவனை சிருஷ்டித்து தன்னை அவமதித்த தக்ஷனை உடனே கொன்றுவரும்படி உத்தரவிட்டார். அதன்படி வீரபத்ரன் தக்ஷன் யாக சாலைக்குச் சென்று அவனைக் கொன்றுவிட்டான். அதனால் விளைந்த பிரமமஹத்தி தோஷம் சிவபெருமானுக்கு ஏற்பட்டு ஒரு பேயுருவில் அவரைத் தொடர்ந்து கொண்டிருந்தது. அதனைத்தவிர்க்க சிவபெருமான் வீக்ஷாரண்யத்தில் உள்ள ஹ்ருத்தாபநாசினீ தீர்த்தத்தில் நீராடவேண்டும் என்று ஆகாயவாணி கூறக்கேட்டு சிவபெருமான் அந்தத் திருக்குளத்தில் நீராடி அதன் கரையில் கோயில் கொண்டுள்ளார். தீர்த்தேச்வரர் என்ற பெயருடன் ஒரு



திருக்குளம்

(44-ம் பக்கம் பார்க்க)

(8-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சிங்கி நம்ப மறுக்கின்றாள் நீங்கள் ஒருமுறை என்னுடன் நேரில வந்து அவளுக்கும் காட்சி தந்து என் வார்த்தையை மெய்ப்பிக்க மாட்டீர்களா'' என்றான். அதற்கு சகலமும் அறிந்த பகவான் ஏதுமறியாதவர் போல... "சுப்பா! யார் இந்த சிங்கி? நான் அவளுக்குத் தரிசனம் தர வேண்டுமா?'' என்றார். "ஸ்வாமி! உங்களுக்குச் சிங்கியைத் தெரியாதல்லவா. அவள் என் மனைவி. மகா கெட்டிக்காரி எளிதில் எதையும் நம்பமாட்டாள். நான் இன்று காலை உங்களைத் தரிசித்தேன் அல்லவா? அதைக் கூறினால் நம்ப மறுக்கிறாள். தண்ணி போட்டாயா? தலை சுத்துதா? என்று ஏளனம் செய்கிறாள். எனக்கு அவளை நம்ப வைக்க வேறு வழி தோன்றவில்லை. அதனால் நான் தண்ணீரில் அமர்ந்து மீண்டும் உங்களை அழைத்தேன். ஒருமுறை எங்கள் வீட்டிற்கு வந்து போகமாட்டீர்களா ஸ்வாமி'' என்றான் சுப்பன். சுப்பனின் குழந்தைத் தனமான கோரிக்கையை ஏற்ற அய்யப்பன் அவன் வீட்டிற்கு வர இசைந்து அவனுடன் புறப்பட்டார்.

சென்றவன் எப்படியாவது அய்யப்பனை அழைத்து வருவான் என்ற நம்பிக்கை ஏற்பட சிங்கி நொடிப் பொழுதில் வீட்டைப் பெருக்கி பசுஞ்சாணம் கொண்டு மெழுகிக் கோலமிட்டு விளக்கேற்றி, வீட்டில் இருந்த சிறிதளவு வெல்லம், பயத்தம் பருப்பு அரிசியால் சர்க்கரைப் பொங்கல் தயாரித்து, தோட்டத்திலிருந்து வாழை இலை கொய்து வந்து நடு வீட்டில் பலகை இட்டு அதன் முன்பு இலையை விரித்து, அதில் தான் தயாரித்த இனிப்புப் பொங்கலை இட்டு ஆறவைத்து, ஸ்வாமி வருகின்றாரா பார்க்கலாம் என்று எண்ணிய படி வாயிலுக்கு வந்தாள். அப்பொழுது ஸ்வாமி அய்யப்பனும், அவளது கணவனும் வீட்டு வாயிலின் முன் வந்தனர். அதைக்கண்ட சிங்கி கப கபவென்று சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து பகவானின் காலை அலம்பி அத்தண்ணீரைத் தன் தலையில் தெளித்துக் கொண்டு, ஸ்வாமி அய்யப்பனுக்கு நல்வரவு கூறி வீட்டினுள் அழைத்துச் சென்று மணையில் அமரச் செய்து தான் தயாரித்த பொங்கலை உண்ணவேண்டும் என பிரார்த்தித்து நின்றாள்.

புன்னகைமாறாமல் அவள் வேண்டு கோளின்படி அந்தப் பொங்கலை சுவைத்து உண்ணவாரம்பித்தார் அய்யப்பன். அதைப் பார்த்த சுப்பன் "ஐயனே! உங்களுக்கு இவ்வளவு பசியாக உள்ளதென்று எனக்குத் தெரியாமல் போய்விட்டதே! நெய் முந்திரிப்பருப்பு ஏலம் போன்ற வஸ்துக்களின் கூட்டுடன் உமக்காக அறுசுவை உணவு படைக்கும் எங்கள் குருநாதரின் யாகசாலைக்குக் கூட்டிச் செல்லாமல் இந்த ஏழை குடிசைக்கு உம்மைக் கூட்டிவந்து இந்த நெய் யில்லாப் பொங்கலை உமக்குப் படைத்துவிட்டேனே. இப்பொழுதும் மிஞ்சிப் போகவில்லை. நீங்கள் என்னுடன் யாக சாலைக்கு வாருங்கள். அங்கு உமக்காக எத்தகைய அறுசுவை உணவுகள் நெய்யினால் தயாரித்துள்ளார்கள் என்பது உங்களுக்கே புரியும்'' என்றான் சுப்பன். அதற்கு பகவான் "சுப்பா! அங்கு நெய் இருந்தாலும் 'மெய்' இல்லை. இங்கு நெய்யே இல்லையெனினும் மெய்யன்பு இருக்கின்றது''. என்றார். அருகிலிருந்த சிங்கி "மாமா! ஸ்வாமி உணவருந்தும் போது என்ன வள வள வென்று பேச்சுக் கொடுக்கிறாய். அவரை நிம்மதியாகச் சாப்பிடவிடு'' என்று கூறி ஐயனைப் பார்த்து "அப்பா! அய்யப்பா! மாமாவுக்கு ஒண்ணும் தெரியாது. நீ நிம்மதியாகச் சாப்பிடு என்றாள். பகவானும் உண்டுமுடித்தார். பிறகு "சுப்பா! சிங்கி! கபடமற்ற உங்களது உபசரிப்பு என்னை மகிழச்செய்தது. யாது வரம் வேண்டுமோ தயங்காமல் கேளுங்கள் தருகிறேன்'' என்றார்.

அதற்கு சுப்பன் தங்களுக்கு அய்யப்ப ஸாக்ஷாத்காரம் கிடைக்கக் காரணமாயிருந்த பரமேச்வர சர்மாவிடம் அய்யப்பனை அழைத்துச் 'செல்ல வேண்டும் என்று தோன்றவே "ஐயனே! தாங்களுக்கு நிஜமாகவே ஏதாவது வரம் தரவேண்டுமென்று தோன்றினால், எங்களுடன் வந்து பெரியசாமி அவர்களுக்கும் தரிசனம் தரவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டான். அதற்கு அய்யப்பன் "சுப்பா! சந்தேஹம் அற்ற பரிசுத்த ஆத்மாக்களின் நம்பிக்கையில்தான் நான் குடியிருப்பேன். நம்பிக்கை குன்றியவர்களால் என்னைக் காணவியலாது. சர்மா இன்னும் பக்குவப்படவில்லை'' என்றார். அதற்கு சுப்பன் 'எங்களுக்காக ஒருமுறை அவருக்குக் காட்சி தரலாகாதா' என பணிவுடன் வேண்டவே பகவானும் "சரி அப்படியே ஆகட்டும் புறப்படுங்கள்'' என்றார்.

மூவரும் யாக சாலையை நோக்கி நடக்கவாரம்பித்தனர். வழிகாட்டிச் சென்ற சுப்பன் உடன் வந்த தன் மனைவியிடம் "சிங்கி! அய்யப்பன் நமக்காக பெரியசாமிக்குத் தரிசனம் தர ஒப்புக்கொண்டாரே அல்லாமல் அவருக்கு எள்ளளவும் இஷ்டம் இல்லை என நினைக்கின்றேன். நீ என்ன சொல்கிறாய்?'' என்றான். "எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. எதற்கும் ஸ்வாமி நம் பின்னால் வருகின்றாரா பார்க்கலாம்'' என்றபடி சந்தேகத்துடன் திரும்பிப் பார்த்தனர். அவர்கள் எண்ணியபடியே அதுவரை அவர்களுடன் வந்த அய்யப்பனைக் காணவில்லை. 'ஸ்வாமி! ஸ்வாமி' என்று தொண்டை கிழியக் கத்தியும் பலன் ஏதும் இல்லை. அவர்கள் இருவரும் நின்றிருந்த இடம் அன்றாடம் சுப்பன் துணி துவைக்கும் ஏரிக்கரை. உடனே சுப்பனுக்கு ஒரு வழி தோன்றியது. முன்பு செய்ததைப் போல மூக்கை மூடி தண்ணீரில் அமர்ந்தால் அய்யப்பன் வருவார் என்ற எண்ணம் தோன்றவே தண்ணீரில் இறங்கி அமர்ந்

தான். ஆனால் தண்ணீரில் மூச்சு விடாமல் அமர்ந்தால் யாராயினும் இறந்துவிடுவார்கள் என அய்யப்பன் கூறியது நினைவிற்கு வரவே அவனால் ஒரு நிமிடத்திற்கு மேல் தண்ணீரில் அமரமுடியாமல் ப்ராணபயம் வந்து தடுத்தது. பலமுறை முயன்றும் இதே நிலைதான். அவன் உறுதி தளர்ந்தது. இனி அய்யப்பனைக் காணவே முடியாது என்ற நிலையை அடைந்த அந்தத் தம்பதிகள் அந்த ஏரியைப் பலமுறை சுற்றிச் சுற்றி வந்து 'அய்யப்பா! அய்யப்பா!' என அரற்றிய வண்ணம் இருந்த போது ஆகாயத்திலிருந்து ஒரு குரல் கேட்டது.

"சுப்பா! நீ தன்னலமின்றி உயிரையும் பொருட்படுத்தாமல் என்னைக் கண்டே திருவதென்ற உறுதியில் முதன்முறையாகத்தண்ணீரில் அமர்ந்ததும் உடனே நான் உன் முன் தோன்றினேன். அதன் பிறகு நீ உன் மனைவிக்காக என்னைக் காண வேண்டி உறுதி குலையாமல் தண்ணீரில் அமர்ந்த போதும் உனக்குக் காட்சி தந்தேன். உன் வேண்டுகோளின்படி உன் பின்னால் வந்து உன் மனைவிக்கும் காட்சியளித்தேன். அப்பொழுது உனக்கு நான் உன் பின்னால் வருகின்றேன் என்ற முழு நம்பிக்கை இருந்தது. ஆனால் சர்மாவிற்கும் உன வேண்டுகோளின்படி காட்சியளிக்க வேண்டும் என்று உன் பின்னால் வந்து கொண்டிருக்கும் நான் பின் தொடருவேனா, மாட்டேனோ என்ற சந்தேகம் உன்னுள் தோன்றியபோதே நான் உன்னை விட்டு விலகிவிட்டேன். அதன் பிறகும் நீ உயிரைப் பெரிதாக எண்ணாமல் தொடர்ந்து தண்ணீரில் அமர்ந்திருந்தால் நான் கண்டிப்பாக வந்திருப்பேன். முந்தைய அந்தத்துணிவு உன்னிடமிருந்து நீங்கி சந்தேகப் பேய் உன்னுட் புகுந்துவிட்டதால் நான் உன்னைவிட்டு, நீ காணமுடியாத தூரத்திற்குச் சென்று விட்டேன். இதன் மூலம் உலகோர் அறிந்து கொள்ள வேண்டியதென்னவென்றால் கடவுளைக் காண விரும்புவோர் கபடமற்றவர்களாகவும் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டவர்களாகவும் இருக்க வேண்டும். அப்பேர்ப்பட்டவர்களின் நம்பிக்கையை மெய்ப்பித்து அவர்களுக்குக் காட்சி தந்து அவர்களை ஆட்கொள்ளுவேன் நான். நம்பிக்கை தான் கடவுள் தரிசனத்திற்குச் சிறந்த வழி என்று நிரூபிக்கவே யாம் இந்த நாடகத்தை நடத்தினோம். நீ சிங்கி, பரமேச்வர சர்மா மூவரும் என் அருளுக்கு இலக்கானவர்களே! நீங்கள் பலகாலம் புவியில் சகல நலன்களும் பெற்று இன்புற்று வாழ்ந்து, முடிவில் என்னடி வந்து சேருங்கள்" என்று முத்தாய்ப்பு வைத்தது அந்த அசரீரி!

★

---

(42-ம் பக்கத் தொடர்ச்சி)

சிவாலயம் குளத்தருகே இன்றும்காணலாம். சில வருடங்களுக்கு முன்பு இந்தத் திருக்குளம் வற்றிப் போய், மண்டபம் பழுதடைந்திருந்தது. அஹோபில மடத்து ஜீயர் சுவாமிகள் இந்தத் திருக்குளத்துக்குப் பணிகள் செய்ய ஏற்பாடு பண்ணி இப்போது அழகிய மண்டபத்துடன் கோடையிலும் வற்றாத தீர்த்தத்தோடு உள்ளது. அமாவாசை தினம் கூட்டம் கூட்டமாக பக்தர்கள் ஸ்நானத்துக்கு வருகிறார்கள். கௌசிகன் என்ற அந்தணர் ஒருவர் அனேக பாபச் செயல்கள் புரிந்தபோதிலும் இத்திருக்குளத்து ஸ்நான மகிமையால் அவர் முக்தி பெற்ற வரலாறும் ஸ்தல புராணத்தில் காணப்படுகிறது.

"எவ்வுள் கிடந்தான்" என்றழைக்கப்படும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் வீக்ஷாரண்யம் வந்து கோயில் கொண்ட வரலாறும் ஸ்தலபுராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. ஒரு சமயம் அசுர குலத்தில் உதித்த "மது கைடபன்" என்னும் இரண்டு ராக்ஷஸர்களுக்கும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்கும் மிக்க பயங்கரமான யுத்தம் நடந்தது. அக்கொடிய அரக்கர்களை அழிக்கக் கருதி பகவான் மூவுலகத்தையும் அழிக்கவல்ல ஸ்ரீ சுதர்சனசக்கரத்தை பிரயோகித்தருளினார். மிகப் பெரிய அக்னி ஜ்வாலையுடன் துரத்தி வந்த அந்த சக்ராயுதத்திற்கு பயந்து அந்த ராக்ஷஸர்கள் இவ்வீக்ஷாரண்யத்திற்கு ஓடிவந்து மறைந்தார்கள். ஸர்வ சக்தனான பகவான் அங்கு வந்து சக்ராயுதத்தால் அந்த அரக்கர்களை ஸம்ஹரித்தார். பின்னர் இவ்விடமே பள்ளி கொண்ட கோலத்தில் பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார்.

இவ்வீக்ஷாரண்யத்தின் நடுவே தர்மஸேன மஹாராஜன் என்ற மன்னனுக்கு வஸுமதி என்ற பெண் இருந்தாள். அவள் நங்கைப் பருவத்தில் நந்தவனத்தில் தன் சேடிகளுடன் உலவி வரும் போது ஸ்ரீ வீரராகவப் பெருமான் அவள் முன் தோன்றி அவள் மஹாலட்சுமியின் அவதாரம் என்று கண்டு கொண்டு பின்னர் தர்மஸேன மஹாராஜனின் அனுமதியுடன் அவளைத் திருமணம் செய்து கொண்டார். திருவள்ளூர் கோவிலில் வளர்மதி என்கிற கனகவல்லித் தாயாருக்குத் தனிச் சன்னிதி உளளது.

இவ்வளவு மகத்துவம் வாய்ந்த திருவெள்ளூர் க்ஷேத்திரத்திற்குச் சென்று திருக்குளத்தில் நீராடி, ஸ்ரீ வீரராகவப் பெருமானையும் கனகவல்லித் தாயாரையும் சேவித்தால் அவர்களுக்கு வேண்டும் வரம் கிடைக்கும் என்பது திண்ணம்.

★

# ஆண்டவன் சன்னதியில் ஆறு மணி நேரம்

திருமலையில் கொண்டாடப்படும் பிரம்மோற்சவத் திருவிழா மிகச் சிறப்புடையதாகும். பத்து நாட்கள் நடைபெறும் இக்கோலாகலத் திருவிழா, படைக்கும் கடவுளாகிய பிரம்மாவால் தொடங்கி வைக்கப்பட்டதாகப் புராணங்கள் புகல்கின்றன. இதற்கான சான்றுகள் 'வேங்கடாசல மகாத்மியம்' 'வராக புராணம்' போன்ற புராணங்களில் காணப்பெறுகின்றன. பத்து நாட்கள் மிக விமரிசையாகக் கொண்டாடப்படும் பிரம்மோற்சவத்தின்போது தேவர்களும் பூவுலகிற்கு வந்து திருமலையில் எழுந்தருளியுள்ள திருவேங்கடவனின் திருவருளைப் பெறுகிறார்கள். இத்திருவிழாக் காலத்தில் திருமலை திருமால் உறையும் வைகுந்தமாகவே திகழ்கிறது.

திருமால் கோயில் கொண்டுள்ள திருமலை ஆண்டு முழுவதும் எல்லா நாட்களும் திருவிழாக்கோலம் பூண்டிருப்பது உண்மை. ஆயினும் பிரம்மோற்சவம், கருடசேவை, ஆங்கிலப் புத்தாண்டு நாள் போன்ற நாட்களில் திருமலைக்கு வருகை தரும் பக்தர்களின் கூட்டம் கட்டுக்கடங்காமல் இருக்கும்.

1990 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் கடைசி வாரத்தில் நடைபெற்ற பிரம்மோற்சவ விழாவின் போது அடியேனுக்கு ஏற்பட்ட அனுபவங்களை மதிப்பிற்குரிய 'ஸப்தகிரி' வாசகர்களுடன் பகிர்ந்துகொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

நான் பிறந்த வெண்கந்தூர் (தென்னாற்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டம்) சிற்றூர். ஆனாலும் வைணவப் பெரியோர்கள் வாழ்ந்த, வாழ்கின்ற காரணத்தால் அது பெருமை பெற்ற ஊர். இவ்வூர்ப் பெருமக்கள் அரும்பாடுபட்டு அருள்மிகு சீனிவாசப்பெருமாளுக்கு அழகான புதிய திருக்கோயில் அமைத்துள்ளார்கள். திருக்கோயிலுக்கான மகாசம்ப்ரோட்சணம் 3-6-90 தேதி சிறப்பாக நடைபெற்றது.

வைணவக் குடும்பத்தில் பிறக்கும் பேறு எனக்குக் கிடைத்தபோதும் திருப்பதி திருமலை சென்று அங்கு கோயில் கொண்டுள்ள உலக நாயகன் திருமாலைக் கண்டு சேவிக்கும் பேறு எனக்குக் கிடைக்கவில்லை.

கல்லூரிப் படிப்பில் நான் திசை மாறிப்போக நேர்ந்தது. பட்டப் படிப்பைத் தொடர்ந்து மேற்படிப்பு தொடர முடியாத நிலை ஏற்பட்டது. இதனால் வறுமைச் சூழலில் நான் பிறந்தபோதும் உயர் கல்வி பெற வேண்டும் என்பதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்த எனக்கு ஒரே அதிர்ச்சி. இரண்டு ஆண்டுகள் வீணாகக் கழிந்தன. பிறகு சட்டக்கல்வி பயில விண்ணப்பம் செய்தேன். என் முன்னோர் செய்த நல்வினையால் இடம் கிடைக்க திருமலை தெய்வத்தை வேண்டினேன். இடம் கிடைப்பது அரிதாக இருந்த போதும் சென்னை சட்டக்கல்லூரியில் எனக்கு எளிதாக இடம் கிடைத்தது. இதற்கு நன்றி தெரிவிக்கும் வகையில் 1972-ம் ஆண்டு முதல் முதல் திருமலைக்குச் சென்றேன். அதன் பிறகு இறைவன்பால் சிந்தனை செல்லவில்லை. வாழ்க்கையில் திருப்பங்கள், வழக்கறிஞர் தொழில், திருமணம், மனைவி, மக்கள், குடும்பம் என்று தொடர்கின்றன. 1986-ம் ஆண்டு என் அண்ணனின் வற்புறுத்தலால் எங்கள் குடும்பத்தினர் அனைவரும் திருமலைக்குப் புனிதப் பயணம் சென்றோம். திருவேங்கடவனின் திருவருளால் அதிலிருந்து தொடர்ந்து ஆண்டுக்கு ஒரு முறை திருமலைக்கு என் குடும்பத்தோடு சென்று இறைவனைத் தரிசித்து வருகிறேன்.

ஆண்டுதோறும் மே அல்லது ஜூன் மாதம் நான் ஏற்று வந்த புனிதப் பயணத்துக்கு 1990 ஆம் ஆண்டில் சோதனை ஏற்பட்டது. மே, ஜூன், ஜூலை, ஆகஸ்ட் மாதங்கள் கடந்தன. ஆனால் பல பிரச்சனைகளால் என் திருமலைப் பயணம் தடைப்பட்டன.

---


திரு. எஸ். இராசாராமன்,
பி.எஸ்சி., பி.எல்.,
திண்டிவனம்.


---

"இறைவா! நான்கு ஆண்டுகள் தொடர்ந்து என்னையும் என் குடும்பத்தையும் வரவழைத்து அருள் புரிந்து வந்தாயே, இப்போது என்ன ஆயிற்று? என் மேல் என்ன கோபம்? நான் என்ன குற்றம் செய்தேன்? உன் புனிதமான கோயிலுக்கு வர எனக்குத் தகுதி இல்லையா? நாள் தோறும் நீண்ட வரிசையில் வந்து உன்னைத் தரிசிக்கும் உன் அடியவர் கூட்டத்துக்கு என்னால் இடைஞ்சல் ஏற்பட்டுவிடும் என்று எண்ணிவிட்டாயா? நான் உன்னைத் தரிசிக்க திருமலைக்கு வரும்பயணம் ஏன் தள்ளிப் போகிறது?" என்றெல்லாம் ஏழுமலையில் கோயில் கொண்ட இறைவனிடம் முறையிட ஆரம்பித்தேன்.

29-9-1990 அன்று திருமலைக்குப் புறப்படும் வாய்ப்பு இறைவன் அருளால் ஏற்பட்டது. என் குடும்பம் ஏழுபேர் கொண்ட குழுவாகும். அன்று காலை 6-20 மணிக்கு திண்டிவனத்தில் ஆந்திர பிரதேச மாநில சாலை போக்குவரத்துக்கழகப் (APSRTC) பேருந்தில் ஏறி பயணம் செய்து திருமலையை மாலை 2-30 மணிக்கு அடைந்தோம். (பாண்டிச்

## சந்தாதாரர்களுக்கு...

31-1-91 -ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

12 22 39 80 81 129 143 155 156 164 205 264 273
275 277 361 426 448 463 464 468 484 486 488 493 494
624 626 896 912 913 935 938 948 950 970 997 1009 1012
1017 1035 1045 1051 1053 1062 1085 1089 1095 1102
1113 1127 1134 1138 1532 1791 2167 2286 2296 2313
2336 2353 2358 2376 2391 2394 2419 2426 2437 2450
2453 2457 2459 2469 2482 2485 2488 2490 2494 2497
2498 2502 2503 2512 2516 2526 2533 2537 2538 2545
2555 முதல் 2557 2562 2574 2676 2854 3248 3437 3667
3668 3670 3674 3678 3686 3688 3689 3691 3692 3695
3699 3701 3703 3707 முதல் 3709 3719 3726 முதல் 3730
3734 முதல் 3738 3747 3749 3751 3752 3755 3763 3764
3769 3771 3800 3924 3991 4752 4830 4865 4979 4980
5010 5074 5077 6534 6712 6744 6829 6841 முதல் 6843
6874 6875 6877 முதல் 6882 7253 7641

சேரியிலிருந்து திருப்பதி செல்லும் இப்பேருந்தைத் திண்டிவனத்தில் காணும்போதெல்லாம் நான் பரவசம் அடைவது வழக்கம். அது திருப்பதியிலிருந்து வருவதும் திருமலைக்குச் செல்லும் பக்தர்களை அது சுமந்து செல்வதும்தான் அதற்குக் காரணம்.)

என் குழந்தைகளுக்குக்கு கல்யாண கட்டத்தில் மொட்டை அடித்துபின் திருக்குளத்தில் (புஷ்கரணியில்) நீராடினோம். ஆதிவராகசாமியைத் தரிசித்துவிட்டு இரவு 7-15 மணிக்கு வரிசையில் நின்றோம். பக்தர்கள் வரிசை மெல்ல ஊர்ந்தது. இரவு 10-30 மணிக்கு வரிசை கட்டடத் தொகுதி ('Q' complex) 25வது கொட்டகையில் தங்க இடம் கிடைத்தது. மேற்கொண்டு வரிசை நகரவில்லை. இரவு 11-00 மணி அளவில் தரிசனம் கிடைக்கும் என்று எண்ணியிருந்த எனக்கு மறுநாள் 30-9-1990 பகல் 11-00 மணிக்குத்தான் தரிசனம் கிட்டும் என்று தெரிய வந்தது. தொலைக்காட்சியில் 'இராமாயணம்' பார்த்துக் கொண்டிருந்த நான் தூங்கிவிட்டேன்.

30-9-1990 காலை 5-00 மணி பல் துலக்க பற்பசை தேடினேன். கிடைக்கவில்லை. வெளியில் சென்று வாங்கி வரலாம் என்று பணியில் இருந்த ஊழியரைக் கதவைத் திறந்து விடச் சொன்னேன். அவரும் திறந்து விட்டார். 'வைகுந்தம்' நுழைவு வாயில் அருகில் முதல் நாள் இரவு 10-30 மணிக்குப் பார்த்த கடை மூடிக் கிடந்தது. கடைவீதிக்குப் போய்வர யோசனை செய்தேன். நான் வருவதற்குள் வரிசை நகர ஆரம்பித்தால் நான் இல்லாமல் என் குடும்பத்தினர் கவலைப்படுவார்களே என்ற பயம். பற்பசை வாங்காமல் திரும்பினேன். அங்கு வந்த திருமலை திருப்பதி வேஸ்தான ஊழியர் ஒருவரிடம் 'எனக்குப் பற்பசை வேண்டும்' என்றேன். வேறொரு ஊழியர் வந்து "நீங்கள் தமிழ்நாடா?" என்றார் நான் "ஆம்" என்றேன். "கோயில் உண்டியல் எண்ணும்போது சாட்சியாக இருக்க வருகிறீர்களா? உங்களுக்குச் சம்மதமா?" என்று வினவினார். திருமலைக் கோயில் உண்டியலை எண்ணும்போது பக்தர்களில் மூன்று நபர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களை சாட்சிகளாகக் கொண்டு எண்ணுகிறார்கள் என்ற விவரத்தை நான் ஏற்கெனவே அறிந்திருந்தேன். இதனால் ஆலய அலுவலர் கேட்டதும் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன். ஆனாலும், தயக்கம். நான் இல்லாமல் மூன்று குழந்தைகளையும் வயது முதிர்ந்த இரண்டு தாய்மார்களையும் அழைத்துக் கொண்டு வரிசையில் சென்று இறைவனைத் தரிசிக்க என் மனைவிக்குச் சிரமமாக இருக்குமே என்று எண்ணினேன். எனக்குக் கிடைத்த நல்வாய்ப்பை அறிந்த என் மனைவி என்னைவிடப் பெரிதும் மகிழ்ந்தாள். "உங்களுக்கு எப்படிப்பட்ட வாய்ப்பு கிடைத்துள்ளது. நீங்கள் கவலைப்படாமல் சென்று இறைவனின் பணியில் ஈடுபடுங்கள். நாங்கள் அனைவரும் நல்ல முறையில் இறைவனைத் தரிசிப்போம். கவலை வேண்டாம்" என்றாள். திருப்தி அடைந்த நான் ஆலய அலுவலருடன் புறப்பட்டேன். அவர் மேலும் இரண்டு பேரை பெங்களூர் நபர் ஒருவரையும் ஆந்திர மாநில குண்டூர் மாவட்டத்தைச் சேர்ந்த ஒருவரையும் தெரிவு செய்தார். கோபுர நுழைவுவாயில் மூலம் எங்கள் மூவரையும் அழைத்துக் கொண்டு சென்றார். "குடியரசுத் தலைவர், பிரதமந்திரி, முதல் அமைச்சர்கள் போன்ற மிக முக்கிய மனிதர்கள் மட்டுமே செல்லக்கூடிய வழியில் நீங்கள் வருகிறீர்கள்!" என்றார் அந்த அலுவலர். உண்மைதானே! காலை ஆறு மணிக்கு உண்டியல் எண்ணும் பணி துவங்கும் முன் இறைவனின் தரிசனம் இந்த எளியவனுக்கு மிக எளிதில் கிடைத்தது. அடியவர் கூட்டம் இல்லை. 'ஜரகண்டி' 'போ'

என்று தள்ளுவார் இல்லை. காலை நேரத்தில் இறைவனை அவன் சன்ன தியில் நிம்மதியாகத் தரிசனம் செய்து தொழுவதற்கு வாய்ப்பு கிட்டியது. நான் செய்த தவப்பயன். வேறு எப் போது இப்படிப்பட்ட வாய்ப்பு கிடைக்குமோ? ஊழி முதல்வனை உலகளந்த உத்தமனைக் கண் குளிரக் கண்டு மகிழ்ந்தேன். "ஐயா! நான் உன்னிடம் வருவதால் உன் அடியவர் கூட்டத்துக்கு இடைஞ்சல் ஏற்பட்டு விடும் என்று எண்ணிவிட்டாயா?", என்றகேட்ட என்னிடம் 'அன்பனே! என் அடியவர்களில் நீயும் ஒருவன் தான். மற்ற அடியவர் கூட்டத்தைச் சிறிது நேரம் நிற்கவைக்கிறேன். நீ நன்றாக என்னைத் தரிசனம் செய்து கொள். இப்போது திருப்திதானே?"

என்று இறைவன் என்னிடம் கனி வோடு கேட்பதாக உணர்ந்தேன். தன்னிடம் முற்றிலும் சரண் புகுந்த வர்களுக்குத்தான் அன்பைக் காட்ட திருவேங்கடவன் தவறியதே இல்லை.

திருமலை திருப்பதி தேவஸ்தானம் உதவி செயலாட்சித் தலைவர் தலை மையில் 23 ஊழியர்கள் உண்டியல் எண்ணும் பணியில் ஈடுபட்டனர். சாட்சிகள் முன்னிலையில் உண்டியல் கள் 'சீல்' உடைக்கப்படுகின்றன. காலை ஆறு மணிக்குத் தொடங்கிய எண்ணும் பணி பகல் 12 மணி வரை தொடர்ந்தது. இடையில் 8 மணி முதல் 8-30 மணி வரை சிற்றுண்டி இடைவேளை. சாட்சிகளாகிய நாங் கள் மூவர் உட்பட அனைத்து ஊழி யர்களுக்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானமே சிற்றுண்டி வழங் கியது.

இறைவன் சன்னதியில் கருடாழ் வார் முன்னிலையில் உண்டியல் எண் ணும் பணியில் ஈடுபட்டவாறே ஆறு மணி நேரம் தொடர்ந்து திருமலை தெய்வத்தைக் காணும் நற்பேறு எனக்குக் கிட்டியது. உண்டியலில் 29-9-1990 தேதி வசூலான பணத்தை எண்ணும்போது சாட்சியாகப் பணி புரியும் பேற்றினை இறைவன் எனக்கு அளித்தான். 12-00 மணி வரை எண் ணப்பட்ட பணத்தின் (ரூ. 100/-, ரூ. 20/- நோட்டுகள் மட்டும்) மதிப்பு ரூபாய் ஏழு லட்சம். நாணயங்கள் மூட்டைகளாகக் கட்டப்பட்டன. சீல் வைக்கும்போது ஒவ்வொரு சீலிலும் என்னையும் கையெழுத்திடச் சொன் னார்கள். ரூ. 10/-, ரூ. 5/-, ரூ. 2/-, ரூ. 1/- நோட்டுகளும் மீதி நாணயங் களும் எண்ணப்படவில்லை. நெற் களத்தில் நெல் மணிகள் குவிக்கப் பட்டதுபோல் நாணயங்கள் குவிய லாக ஒரு பக்கம் இருந்தன. தாள் போர் போல் ரூ. 10, 5, 2, 1 நோட்டு கள் ஒரு பக்கம் இருந்தது. அவற்றின் தோராய மதிப்பு ரூ. 3 லட்சம் இருந் திருக்கும். அவற்றை எண்ணுவதற்கு 12 மணிக்கு வேறு அலுவலர்கள் வரு வார்கள் என்றும், சாட்சிகளும் புதிய தாக மூன்றுபேர் வருவார்கள் என்றும், தேவஸ்தான ஊழியர்கள் அனை வருக்கும் மாதம் ஒரு முறை உண்டி யல் எண்ணும் பணியில் ஈடுபட வாய்ப்பளிக்கப்படுகிறது என்றும் அறிந்தேன். உண்டியல் எண்ணும் இடத்தைவிட்டு எண்ணும் பணியில் உள்ள ஊழியர்கள் வெளியே வரும் போதெல்லாம் தீவிர சோதனைக்கு உட்படுத்தப்படுகிறார்கள். சாட்சி களை இவ்விதம் சோதனை செய்வ தில்லை! உண்டியல் எண்ணுவதை அப்படியே வீடியோ காமிரா படம் பிடிக்கிறது. கோபுர நுழைவு வாயிலை அடுத்து துலாபார தராசு உள்ள இடத்துக்கு அருகில் உண்டி யல் எண்ணும் பணி அப்படியே இரண்டு தொலைக் காட்சிகளில் தெரிகிறது. இதை ஆறு நபர்கள் கவனமுடன் பார்த்துக் கொண்டிருக் கிறார்கள்.

இந்த பிரம்மோற்சவத்தின் போது 29-9-90 தேதியுடன் முடிவடைந்த ஒன்பது நாட்களில் 'வைகுந்தம்' நுழைவு வாயில் மூலம் 463473 (நான்கு லட்சத்து அறுபத்து மூன்று ஆயிரத்து நானூற்று எழுபத்து மூன்று) பக்தர்களும் சிறப்பு நுழைவுச் சீட்டுகள் மூலம் 102865 (ஒரு இலட் சத்து இரண்டாயிரத்து எண்ணூற்று அறுபத்தைந்து) பக்தர்களும் திரு வேங்கடவனைத் தரிசித்தனர். கடந்த ஆண்டு பிரம்மோற்சவத்தின்போது வந்த பக்தர்களைவிட இவ்வாண்டு 18,000 பக்தர்கள் அதிகமாக வந் தனர். இவ்வாண்டு பிரம்மோற்சவத் தின்போது உண்டியல், ஆர்ஜித சேவைக் கட்டணங்கள் மூலம் ரூபாய் 1,42,53,725/- (ஒரு கோடியே நாற் பத்திரண்டு இலட்சத்து ஐம்பத்து மூன்று ஆயிரத்து எழுநூற்றுப் பதினைந்து வசூலானது. இது கடந்த ஆண்டு வசூலைவிட ரூபாய் ஏழு இலட்சம் அதிகமாகும். (ஆதாரம்: 4-10-1990 தேதியிட்ட 'தினமலர்' நாளிதழ்)

எவ்விதச் சிறப்பு நுழைவுச் சீட்டும் இல்லாமல் எந்தக் கட்டணமும் இல் லாமல் இலட்சக்கணக்கான பக்தர் களில் மூன்று பேர்களில் ஒருவனாக என்னைத் தேர்ந்தெடுத்து எனக்கும் இறைவன் இனிய தரிசனம் தந்தான்! கரும்புத் தின்னக்கூலி தருவது போல் எனக்கு தேவஸ்தானம் இரண்டு லட்டுகள் அன்பளிப்பாக வழங்கியது. அடியவர்கள்மீது இறைவன் கொண் டுள்ள கருணைக்கு அளவே இல்லை. "மனிதன் இறைவனை நோக்கி ஓர் அடி சென்றால் இறைவன் மனி தனை நோக்கி பத்து அடி வருவான்" என்பது ஆன்றோர் வாக்கு. எனக்கு ஏற்பட்ட அனுபவம் இவ்வாக்கு சத்தியமானது என்பதை விளக்கு கிறது.

'' செடியாய வல்வினைகள் தீர்க்கும்
திருமாலே!
நெடியோனே வேங்கடவா! நின்
கோயில் வாயிலில்
அடியாரும் வானவரும் அரம்பை
யரும் வந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்
பேனே! '

—குலசேகர ஆழ்வார். ★

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

2-11-90 அன்று சென்னை வில்லி வாக்கம் ஸ்ரீ லக்ஷ்மி ஹயவதன பெரு மாள் சன்னதியில் ஸ்ரீ ஸேவா ஸ்ரீநிவாஸ ராகவாச்சாரியர் முன்னி லையில் 'ஸ்ரீ லக்ஷ்மி ஸகஸ்ர நாம ஸ்தோத்திரம்' எனும் கையடக்கநூல் ஒன்று வெளியிடப்பட்டது. பின்னர் ஸ்ரீ மஹாலக்ஷ்மி பெருமை பற்றி பல வைணவப் பண்டிதர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளுக்குப் பின், மேற் படி நூல் இலவசமாக கூடியிருந்த பக்தர்களுக்கு விநியோகிக்கப் பட் டது. ஃ ஃ

அண்மையில் ஹைதராபாத்திலும், திருப்பதியிலும் கூடிய தி. தி. தே. சிறப்பாண்மைக்குழுக் கூட்டத்தில் பின்வரும் சில முக்கிய முடிவுகள் தீர் மானிக்கப்பட்டுள்ளன.

1—4—84க்குப் பிறகு தி. தி. தேவஸ்தான பணியில் சேர்ந்த ஊழி யர்களுக்கு வகிக்கும் பதவிகளுக்குத் தக்கவாறு ஊதியம் மற்றும் சலுகை கள் வழங்கப்படும்வகையில் மேலாண் மையினால் முடிவு ஒன்று மேற் கொள்ளப்பட்டுள்ளது.

ா ஃ ஃ

தி. தி. தே. ஊழியர்களுக்கு வீட்டு மனை வழங்கிடும் வகையில், திருப் பதியில் தி. தி. தே. மாட்டுப்பண் ணையை அடுத்துள்ள காலி இடமான 25 ஏக்கர் நிலம் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ா ஃ

தற்போது திருப்பதியில் செயற் பட்டுவரும் தி. தி. தே. அச்சகம் ரூ. 15 இலட்சம் செலவில் நவீனப் படுத்தப்படும்.

ஃ ஃ ஃ

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

